ஓம் தத் சத்.
பரப்ரஹ்மணே நம:

# வேதாந்த சாஸ்திர சங்கிரகம்.

இது கோவிலூர் பரம்பரை, சத்திரப்பட்டி
**ஸ்ரீலஸ்ரீ சுப்ரமணிய ஞான தேசிக சுவாமி**
அவர்களாதீனத்தின் வழிவந்த
சிவகாசி மாநகரத்திலுள்ள விஸ்வநகர்
**ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞான தேசிக**
சுவாமியவர்களின் பிரதம சிஷ்யையும், ஆத்ம
ஞானியுமான, மதுரை ஜில்லா, திருமங்கலம்
தாலூகா, பேரையூர் ஜமீன் சுப்புலாபுரம்
**சாது-நித்தியானந்தம்மாள்**
அவர்களால் இயற்றப்பெற்று,
அவருடைய சீடராகிய, வன்னிவேலமாநகர்
**திரு. வே. கிருஷ்ணசாமி அவர்களால்**
தொகுக்கப்பெற்று,

**மதுரை, ஸ்ரீ மீனாம்பிகை பிரஸில்**
பதிப்பிக்கப்பெற்றது.

 1955. [விலை ரூ. 1-8-0.

ஓம்.




ஸ்ரீ பாலசுப்ரமணியர்.

ஓம் தத் சத்.

பரப்ரஹ்மணே நம:



ஸ்ரீமத் சாது-நித்தியானந்த அம்மையார்.



# முகவுரை.



அருமறைப் பொருளின் உண்மை யாதென அறிவதற்குமுன் தத்துவக் கூட்டங்களின் பெயர் தெரிந்தால்தான் ஒவ்வொன்றையும் நியதிகளைந்து செல்லமுடியும். அப்படியல்லாமலிருந்தால் வேதாந்த விசாரம்பண்ணுவதற்குச் சரியான வழி யில்லாமல் போய்விடுமெனக்கருதி சாது நித்தி யானந்தம்மாள் அவர்கள் இயற்றிய இந்நாலுக்கு "வேதாந்த சாஸ்திர சங்கிரகம்" எனப் பெயர் கொடுத்திருப்பது மிகவும் பொருத்தமெனக் கருது கிறேன். இந்நூல் அடியேனல் முழுவதும் பார்க் கப்பட்டது. இஃது வேதாந்தவிசாரம் பண்ணு பவர்களுக்கு மிகவும் அத்தியாவசியமான ஓர் நூல் என்பதே அடியேனது அபிப்பிராயம். ஆத லால் முமுட்சுக்களாக விருப்பமுடையோர் இந்நூலைப் பார்ப்பது நன்றே.

இங்ஙனம்,

**S. கந்தசாமி பிள்ளை,**

மானேஜிங் புரோப்ரைட்டர்,

ஸ்ரீ மீனும்பிகை பிரஸ், மதுரை.

# பொருளடக்கம்.

1. முன்னுரை.
2. சிறப்புப் பாயிரம்.
3. ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞான தேசிக சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்.
4. ஸ்ரீமத் நித்தியானந்த அம்மையார் அவர்கள் வரலாற்றுச் சுருக்கம்.
5. ஸ்துதிகள்.
6. நன்றி மொழி.
7. தேகத்திலுள்ள தத்துவங்கள்.
8. ஞானத்திற்குரிய லட்சணங்கள்(வினா-விடை)
9. ஞானி, அஞ்ஞானியின் தன்மை.
10. சீடன் நன்முயற்சி.
11. அதிகாரிகளின் தன்மை.
12. மகா வாக்கிய உபதேச குருக்கள் பரம்பரை.
13. ஞானியின் பெருமை.
14. ஞானிகளுடைய செயல்.
15. சங்கரர் வாக்கியம்.
16. விவேக ஷட்கம்.

ஓம் தத் சத்.

# முன்னுரை.

ஜகத் குரு ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியார்; கலியுக அவதார வேதாந்த ஸ்தாபகர் பரமகுரு ஸ்ரீ கௌட பாதாச்சாரியார்; ஞான குரு ஸ்ரீ கோவிந்த பாதாச்சாரியார் இவர்களுக்கு நமஸ்காரம்.

அறம், பொருள், இன்பம், வீடென்னும் இந்நான்கினுள் வீடு என்னும் மோக்ஷமே பரம புருஷார்த்தமாம். துக்க நிவர்த்தி, சுகப்பிராப்தி ரூபமான அம்மோக்ஷத்தை விளக்கும் விரிவான வேதாந்தக் கிரந்தங்களில் முக்கிய விஷயங்கள் இந்நூலின்கண் எழுதப்பட்டிருக்கின்றன. இத்தகைய விஷயங்கள் நன்ருய் விளங்குவதற்கும், குறிப்புப் பொருளாகவும் மறைபொருளாகவும் உள்ளவை வெளிப்படையாய்த் தெரிவதற்கும் எழுதப்பட்ட குறிப்புகளென உணரவேண்டுமே யன்றி, நூலிலேயே உள்ளவையெனக் கருதி விடலாகாது. இவை விரிந்த நூல் பார்க்க இயலாத அதிகாரிகட்கு மாணிக்கம் போன்ற விஷயங்களாகும்.

# முன்னுரை.

இந்நூல் நானா ஜீவவாதக் கட்டளை, கைவல்லிய நவநீதம், பாலபோதம், விசார சந்திரோதயம், விசாரசாகரம் முதலிய நூல்களின் உதவிகொண்டு எழுதப்பட்டது.

இத்தகைய நூலை எழுதிய கிருஷ்ணசாமி அவர்களுடைய தாயாரும், தந்தையாரும் இல்லறம் வழுவாது நடத்தி, சாதுக்கள் சேவை, குரு உபதேசம், வேதாந்த சாஸ்திர அப்பியாசம் செய்தவர்கள். இவர்களுக்கு சில புதல்வர்கள் தோன்றி மறைந்து போனார்கள். மூத்த புதல்வர் தான் கிருஷ்ணசாமி. அவர்கள் சிரஞ்சீவியாயிருந்து ஆங்கிலத்திலும், தமிழிலும் சிறந்த கல்வியறிவு பெற்று உத்தியோகம் பார்த்து வந்தார். தற்சமயம் உத்தியோகம் விடுத்து மானிடப்பிறவி எடுத்தற்குரிய பயன் பெறவேண்டும் என்று நினைத்து வேதாந்த ஆராய்ச்சி செய்து சர்வதுக்க நிவர்த்தி பரமானந்த பிராப்தியாகிய மோட்ச சுகமடைய ஆவல் உடையவராய் இருக்கிறார். இந்நூலை ஸ்ரீ நித்தியானந்தம்மாள் வேண்டுகோட்கிணங்கி எழுதினார். இவர் விரைவில் ஞான ஆராய்ச்சியில் ஈடுபடுமாறு இறைவன் அருள் புரிவாராக.

அறிவின் இயற்கையாலோ, பிறகாரணங்களாலோ, இதிற்சிற்சில குறைகள் காணப்படின் அறிஞர்கள் அவற்றைத் திருத்தியமைத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ரிஷீகேசம் ஸ்ரீஸ்வாமி சிவானந்த சரஸ்வதியவர்களின் சீடரும், ஈங்கோய்மலை சிவானந்த சாதனநிலைய ஸ்தாபகரும், தலைவருமாகிய கீதா வாசஸ்பதி ஸ்ரீஸ்வாமி அத்வயானந்த சரஸ்வதியவர்களும்; கோவிலூர் மடம், திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகளவர்கள் மாணாக்கரும், திருப்பூவனம் வேதாந்த மடஸ்தாபகரும், மண்டலேசுவரரும், திரிபாஷா பண்டிதமணியும், சதசாஸ்திர கர்த்தருமாகிய ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சாரிய ஸ்வாமி யவர்களும் தங்களுடைய அலுவல்களைப் பொருட்படுத்தாது, கருணைகூர்ந்து இந்நூலைக் கண்ணுற்று, குறைகள் நீக்கி, செவ்வனே வெளியிட சிறப்புப் பாயிரம் ஈந்துதவியதற்கு உளமார்ந்த நன்றி.

ஓம் தத் சத்.

இங்ஙனம்,

நித்தியானந்தம்மாள்.

ஓம் தத் சத்.

# சிறப்புப் பாயிரம்.

ரிஷீகேசம், ஸ்ரீஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்களின் சீடரும், ஈங்கோய் மலை, சிவானந்த சாதன நிலைய ஸ்தாபகரும், தலைவருமாகிய
கீதா வாசஸ்பதி ஸ்ரீஸ்வாமி அத்வயானந்த சரஸ்வதியவர்கள் இயற்றியது.

வித்தகர் போற்று கின்ற வேதாந்த மரபில் வந்து
தத்துவ முணர்ந்து மோனச் சமாதியிற் பயின்ற தூய
நித்தியா னந்தத் தாயார் நினைந்துசெய் நூலா மிந்த
ஒத்துறு மிலக்க ணத்தை ஓதுவார் உணர்வின் மிக்கார்.

---

திருப்பூவனம், வேதாந்தமடம்,
ஸ்ரீகாசிகாநந்தஞானுச்சார்யசுவாமிகள் இயற்றியன.

உத்தியாய் உகை முதல்வன தூருவை
உலகினர் உண்மையாய் உணர
அத்திபா திப்பி ரிய சொரூபம்
ஆனநல் இலக்ஷணத் தோடு
எத்தவத் தோருங் கொண்டுள பத்தி
இலக்கணங் கள்பல விளங்க
அத்தத்தில் ஆமல கம்எனக் காண
ஆக்கினள் அறவழி நின்ருள்.

அதனது நாமம் நித்தியா நந்தம்
ஆகும்நூ லினதுநா மந்தான்
விதமதாம் வேதாந் தசாத்ர சங்கிரகம்
என்றுதான் உரைப்பர் நல்லோர்
இதமதாய் இதனை இமையவள் போல
இயற்றினள் இன்பம தாகப்
பதமதை விரும்பும் அன்புடை எவரும்
பரமுத்தி அடைவர் திண்ணமதே.

---

திருப்பூவனம் வேதாந்த மடம்
ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள்
அவர்கள் மாணாக்கர்
உயர்திரு காவேரி அய்யா அவர்கள் இயற்றியது.

வெண்பா.

நித்தியா நந்தமெனும் நீள்பெருஞ்சீர் தாயம்மை
பத்தியாற் பன்னூல் படித்துணர்ந்து—முத்திதரு
மிந்தநூல் பாரில் பரிவுடனே பக்குவர்க்குத்
தந்ததுதான் என்னே சதுர்.

---

## சிறப்புப் பாயிரம்.

கோவிலூர் பரம்பரை

ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் அவர்களின்

சகோதரரும், பாடசாலை ஆசிரியருமான

உயர்திரு எம். சங்கிலி சேர்வை அவர்கள்

இயற்றியது.

---

அறுசீர்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சண்முகச் சாமியெனுஞ் சற்குருவின்
ஞருள்பெற்று சகலகலை கற்றுணர்ந்து
எண்ணுதற் கரிதான சாந்திநிலை
தான்பெற்று எல்லோரும் இந்நிலைபெற
உண்மைதரு வேதாந்த நூற்பொரு
ளனைத்தையும் ஒருநூலிலே பொறித்து
புண்ணிய முடன்தந்த நித்தியா
னந்தமெனும் புனிதவதி யெங்களம்மை.

சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

---

உ

ஓம் தத் சத்.

# ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞானதேசிக சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்.



காப்பு.

ஆனைமுக னாறுமுக னம்பிகை—பொன் னம்பலவன்
ஞான குரு வாணியையு ணாடு.

ஐவர் வணக்கம்.

அமரர்கள் பரவுந் திருமுது குன்றி
லாழத்துப் பிள்ளையைச் சிகரிக்
குமரசற் குருவை யிமகிரி ராஜ
குமாரியாம் பெரியநாய கியை
மும்மலமு மொருங்கே யகற்றிடு முக்கண்
முதல்வனைச் சார்ந்தநா யகனை
நமதெணப் படியே முடிந்திடத் தினமு
நாடிநின் றிறைஞ்சிவாழ்த் திடுவாம்.

## குரு ஸ்துதி

அனாதிபவ வாரிதியி லமிழ்ந்த வென்னை
அகண்டபர ஞானமெனு நாவாய் கொண்டு
சனாதனமாம் பரப்பிரம தீரத் தின்கண்
சகஜமதா யேற்றியசற் குருவே போற்றி
வினாசமுறுந் தேகாதி நானென் றெண்ணி
விதவிதமாந் துன்பமிகுந் திருந்த வென்னை
யனாமயமாம் பரப்பிரம நீயென் றோதி
யகண்டசுக நல்கியசற் குருவே போற்றி. 1

அகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே நீயென்று முபதே சித்துச்
சகமுதலீ துண்மையதாஞ் சடநா னென்னுஞ்
சங்கையெலா நீக்கியசற் குருவே போற்றி
விகலமுறுங் கருமத்தால் கதியுண் டென்று
வெகுகால மயக்கமுடன் சுழன்ற வென்னைத்
தகைமைமிகு மகண்டபர ஞானந் தந்து
தற்பரமே யாக்கியசற் குருவே போற்றி. 2

அருள்வடிவா யெழுந்தருளி யென்னை யாண்ட
அகண்டபர வுருவான குருவே போற்றி
சருவவித உலகத்துஞ் சார்வ தற்குச்
சாலவுமே யரியபர குருவே போற்றி

நிருமலமாய் நிஷ்களமாய் நிகரில் லாதாய்
நீக்கமற நிறைந்தபர குருவே போற்றி
பரசிவமாய்ப் பராபரமாய்ப் பரமான் மாவாய்ப்
பரப்பிரம மானபர குருவே போற்றி. 3

---

## சாது சண்முகானந்த சாமி ஸ்துதி.

நித்தியானந்தம்மாள் இயற்றியது.

(அறுசீர்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

ஆசில் சிவகாசி மாநகரின்
தென்பாகம் விசுவ நகரில்
மாசில் மெஞ்ஞான மானவடி
வதனுடன் திகழத் தோன்றித்
தேசிக மூர்த்தமாய் நின்றெட்டுத்
திக்கிலும் சென்ற மர்ந்து
பூசனை புரிவோர்க் கெல்லாம்
பூரணப் பொருள்நீ என்றூர்.

வேதமுதற் பன்னுன்கு வித்தைகளும்
வேறுமுள கலைகள் யாவும்
ஓதியுணர் வரிதாகி யுள்ளதிலதெனு
மெவைக்கு மொத்த தாகித்
தீதில் பரம் பொருள்தானே
அவதரித்துத் திகழும் ஞான
சோதியாய் உலகில் வந்தசண்முகா
னந்தர் பதந்தொழுது வாழ்வாம்.





# சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.

பரத கண்டத்தில் பாண்டிவள நாட்டின் கண் சிறப்புற்றோங்கிய இராமநாதபுரம் ஜில்லா சாத்தூர் தாலுகா சிவகாசி மாநகர்க்கருகில் தென் பக்கத்தில் விஸ்வநகர் என்னும் கிராமத்தில் பண்டார குலத்தில் ஸ்ரீமான் கங்காதரர், ஸ்ரீமதி பார்வதியம்மையார் இருவரும் புத்திரப் பேறு நிலைபெருமை கண்டு, செய்த தவ புண்ணியத்தால் ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் அருள்பெற்று ஓர் ஆண்மகவை யீன்று, அதற்குச் சண்முகானந்த மென்னும் நாமதேயஞ் சூட்டி அன்போடு வளர்த்து, ஐந்து வயதில் பள்ளிக்கனுப்பித் தமிழ்க் கல்வி கற்பித்தார்கள். சிறிது காலம் பள்ளி சென்று பயின்று, பின்பு பெற்றோர் சொற்களைச் சிரமேற் கொண்டு, இல்லறம் நடாத்தத் துணிவு பெற்றுக் கோமதி யென்னும் அம்மையாரை மணந்து,

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை யஃதும்
பிறன் பழிப்பதில்லாயி னன்று — (குறள்)

என்ற பொய்யாமொழிப் புலவர் திருவாக்கிற் கிணங்க இல்லற நீதி வழுவாது நடாத்தி வந்தார்கள். பின் முப்பது வயது வந்ததும் ஓர் வேட்கை

உண்டாகியது. அஃதாவது மக்கள் யாக்கையின் பயனை யடையாமல் வீண்காலங் கழித்துக் கொண்டிருக்கிறோமே யென்ற விசாரம் உண்டாகி, அதற்குரிய சில சாஸ்திர ஆராய்ச்சி யில் முயன்று வரும் நாளில், தாபத்திரயாக்கினி மேலீட்டினுல் சிரத்தில் நெருப்புப் பற்றிக் கொண்டவன் அதையணைக்க ஜலத்தைத்தேடி எப்படி ஓடுகின்ருனே அதே போல் சர்வ துக்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷத் தைக் கொடுக்கவல்ல சற்குரு நாதர் எங்கிருக் கின்ருர்கள் என்ற எண்ணத்துடன் விசாரிக்கும் பொழுது, ராஜபாளைய நகருக்குக் கீழ்புரத்தில் சத்திரப்பட்டி யென்னும் பதியில் ஆசிரமத்துடன் கோவிலூர் பரம்பரையைச்சேர்ந்த ஸ்ரீ சுப்ரமணிய ஞான தேசிக சுவாமிகளிருப்பதாகக் கேள்வி யுற்று அவ்வூருக்குப் போய்ச் சந்திப்புக்குரிய புஷ்பபலாதிகளைக் கொண்டு சென்று சற்குரு சந்நிதியடைந்து அஞ்சலியஸ்தராய், திருவடித் தாமரையில் சாஷ்டாங்கமாக, அடியற்ற மரம் போல் விழுந்து, நமஸ்கரித்து எழுந்து கண்ணீரும் கம்பலையுமாக நின்று சற்குரு சன்னிதானத்தில் நாயினுங் கடையேனுகிய என்னையும் அடிமை

யாக்கி பிறவித் துன்பத்தினின்று நீங்கும்படி அனுக்கிரகம் பண்ணி ரக்ஷிக்கும்படியாய்ப் பிரார்த்தித்து விண்ணப்பிக்க மேற்படி சற்குரு நாத சுவாமிகளும் கருணை கொண்டு, இவன் மோக்ஷமெனும் பெரும் பேற்றையடைய அருகன் என்றெண்ணி உபதேசக் கிரமப்படி அஸ்த மஸ்தக சையோகஞ் செய்து கிருபையோடு ஜீவப்பிரமைக்கிய அபேதத்தை ஐபந்திரிபற உப தேசித்துச் சிலகாலம் ஆசிரமத்திலேயே கூட வைத்திருந்து நான் உபதேசித்த வாக்கியங்களை அனுஷ்டானம் பண்ணி வருவாயானால் உனது பிறவி யென்னும் துன்பம் நீங்கித் துக்க நிவர்த்தி பரமானந்தப்ராப்தியாகிய மோக்ஷத்தை அடை வாய் என்று அனுக்கிரகம் பண்ணி வைத்தார்கள். அப்படியே மேற்படி அடிகள் ஆசிரமத்திலேயே குருவின் உத்தரவைச் சிரமேற்கொண்டு ஆப்தம், அங்கம், தானம், சத்பாவம் என்னும் நான்கு பணிவிடைகளையும் குறைவரச் செய்து கொண்டு நிஷ்காமியமாய்த் தத்துவஆராய்ச்சி, லக்ஷண கிரந்தங்கள், மகா வாக்கிய விசாரணை செய்து சவிகற்ப நிர்விகற்ப சமாதி, அத்வைத அவஸ்தான ரூப நிர்விகற்ப சமாதி யோகங்களை முறையுடன்

அப்பியாசித்து, ஆரூட நிலையை யடைந்து அதன் பின் குருவிடம் சந்நியாசாஸ்ரமம் பெற்றுக் கொண்டும் மேற்படி மடாலயத்தில் தங்கி யிருந்து கொண்டு சகபாடிகளோடு சம்பாஷித்துக் கொண்டு, பின்பு பரந்த உலகின் கண்ணுள்ள முமுட்சுகளாகிய அதிகாரிகளுக்குத் தான் அடைந்த நிலையை விளக்கி, அவரவர்களின் பரிபக்குவத்திற்குத் தக்கபடி அனுக்கிரகம் பண்ணி மோக்ஷமடைவதற்குரிய சாதனங்களை உள்ள வாறு தெரிவித்தும், விரும்பிய பல இடங்களுக்கும் சென்று ஆங்காங்குச் சிஷ்ய வர்க்கங்களுக்கு ஞானோபதேசம் செய்தருளினார்கள். சிவஞான புரம், கைலாசபுரம், இராஜபாளையம், புல்வாய்ப் பட்டி, குன்னக்குடி முதலிய இடங்களில் முமுட் சுக்களாயுள்ள அதிகாரிகளுக்கு உபதேசஞ் செய்தும், சாஸ்திரப் பாடங்கள் சொல்லியும், பின்பு விருத்தப்பருவத்தில் துவாத சாந்த ஸ்தல மாகிய திருவாலவாயென்னும் க்ஷேத்திரத்திற்குத் தென்மேற்குத் திக்கிலுள்ள தேவன் குரிச்சி வெற்பிலுள்ள அக்கினீஸ்வரன் கோவிலுக்கு வடக்கில் வன்னிவேலமா நகர் என்னும்கிராமத்தை யடைந்து மேற்படி கிராமத்தில் சுமார் பத்து

ஆண்டுகள் வரை தங்கி அருகிலுள்ள தம்பி பட்டிக் கிராமத்தில் பல அன்பர்கள் உதவியைக்கொண்டும் சிவகாசிமாநகர் வக்கீல் மொ. சி. சிதம்பர நாடாரவர்கள் முக்கிய உதவியைக் கொண்டும் மேற்படி கிராமத்தில் ஓர் ஆசிரமம் கட்டியும், வன்னி வேலமாநகர், சுப்புலாபுரம், தம்பிபட்டி இன்னும் அருகிலுள்ள சில கிராமங்களிலும் முமுட்சுக்களாயுள்ள அதிகாரிகளுக்கு உபதேசம், சாஸ்திர பாடங்கள் சொல்லியும் உலகினுக்கோர், அறநெறி காட்டித் திகழச்செய்த ஞானாச்சாரிய சுவாமியவர்கள் பின் சுப்புலாபுரம் கிராமத்தி லிருக்கும் பிரம சிஷ்யையாகிய "நித்தியானந்தம்" அம்மையாரவர்களைத் தனக்குப்பின் முமுட்சுக் களாயுள்ள அதிகாரிகளுக்கு அவரவர்கள் பக்கு வத்திற்குத்தக்கபடி உபதேசாதிகளும், சாஸ்திர பாடங்களும் சொல்லிக் கொண்டு உலக உபகார மாகத் தானிருக்க வேண்டுமென்று கருதி அந்த அம்மையாருக்கு உத்தரவு கொடுத்து விட்டு, (1944-ம் ஆண்டு) தமிழ் தாரண வருஷம் ஆடி மீ 5-ம் தேதி குருவாரம் பூசநட்சத்திரம் கூடிய சுப தினத்தில் விதேககைவல்ய மானார்கள். அவர் களது திருச்சடலம் வன்னிவேலமாநகர் கிராமத்

திற்கு மேற்கிலுள்ள ஸ்ரீ இருளப்ப ஸ்வாமி கோவிலுக்குக் கீழ்புரம் சமாதி யடக்கஞ் செய்யப்பெற்றது. சுவாமிகள் அவர்களுக்கு ஆண்டுதோறும் ஆடித்திங்கள் பூச நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் குரு பூஜை மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அந்த ஸ்தலத்தில் ஆலயம் கட்டுவதற்கு விய வருஷம் சித்திரை மீ 7 உ தச்சு செய்து கற்ப கிரகம் பூர்த்தியாகி பிரகாரமண்டபம், அஸ்திவாரம் கட்டி சர்வசித்து வூ தை மீ லிங்க பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் நடந்தது. விசேஷ தினங்களில் நைவேத்திய பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

ஓம் தத் சத்.

சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் முற்றிற்று.

---

ஓம் தத் சத்.

பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீமத் நித்தியானந்த அம்மையார் அவர்கள்

## வரலாற்றுச் சுருக்கம்.



அறுமுகக் கடவுள் அகத்திய முனிவருக்கு அன்புடன் அருளிய இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் முழங்கும் இந் நாட்டின் முதன்மையானதும், முத்துடை நாடென்று முதுமொழிப் பிராட்டியாரால் (ஔவையாரால்) புகழப்பெற்றதும், சிவபெருமான் தமது அன்புடைய அடியவர்கட்கு அநுக்கிரகஞ் செய்ய எண்ணி அறுபத்து நாலு (64) திருவிளையாடல் செய்தருளியதுமாய தென்பாண்டி வளநாடென்னும் மதுரையம்பதிக்குத் தென்மேற்கிலுள்ள தேவன் குறிச்சிக்கருகில் மிகச் சிறப்புடன் கூடி விளங்கும் ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயத்தின் வடபாலுள்ள பே. சுப்புலாபுரம் என்னும் சிற்றூரின் கண் சிறப்புமிக்க நற்குலத்தில் நான்கு தலைமுறையாகப் பெருமையும், புகழும் கீர்த்தியும்

பிரசித்தியும் வாய்ந்த சங்கமகுபேரன் அருள் வரப் பிரசாதத்தினுல் அவதரித்து, "குமார மதி யோகி" என வந்த சங்கர நாராயண ஆயுள் வைத்திய சிரோரத்தின மென்னும் பட்டப் பெயர் பூண்ட புகழ்மிக்க மரபில் மூன்ருவது தலைமுறையில் உதித்த ப. ச. இராமலிங்க ரெட்டியாரும், அவர் இல்லறவாழ்க்கையை நல்லறமாக நாள்தொறும் நடாத்த நன்மனைவியாக உடலுக்கு உயிர் போலும் கண்ணுக்கு இமைபோலும், ஒத்த கருத்துடைய வராய் வந்தமைந்த ஆவுடையம்மை என்பாரும் சேர்ந்து நாள்தொறும் நலம் பெறச் செய்து வந்த தபோபலத்தினுலும், ஏழை எளியவர்கட்கு இடை யருது அன்புடன் செய்து வந்த தான தருமாதி களின் புண்ணிய மகிமையாலும் வந்து அவதரித்த சேய்கள் மூவரில் கடைசிச் சேய் ஆவார் நமது சாது நித்தியானந்தம்மையவர்கள்.

இவரை இவர்தாய் கருவுற்ற நாள்முதல் கடவுளைக் கருத்துடன் பிரார்த்தனை செய்து, கடை நாள் வரை, அதாவது ஐயிரண்டு திங்களும் பூர்த்தி யாகி ஆவுடையம்மை யவர்கட்கு பரிபூரண கர்ப்பம் நிறைந்த போது காலையில் உதிக்கும் கதிரவன் போல் நமது அம்மையவர்கள் கீலக

ஆண்டு மாசித் திங்கள் 30-ம் நாள் (13-3-1909) சனிக்கிழமை யன்று சப்தமிதிதி, கேட்டை நட்சத்திரம் கூடிய சுப நன்னாளில் ஜனனமானார்கள்.

இவர், கதிர் ஒளி வீசிக் கதித்தெழும் கதிரவன் போல் கருப்பை நீங்கிப் பிறந்தவுடன் இவரைச் சேர்ந்த உற்றார் உறவினர் சுற்றத்தவரும் வந்து கூடி இவரைக் கையிலேந்தி உச்சிமுகந்து காணக் காணக் களிப்பு மிக்கூறக் கருணைபாலித்து வந்தார்கள்.

இவ்வாறாக இவரது பெற்றோர்கள் செய்து வந்த தவ, தரும, தானதி, புண்ணிய மகிமையால் இவர் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஆண்டு ஒன்று நிறைவுற்றவுடன் இவர் வடிவும், அழகும், குளிர்ந்த நகைப்புங் குணமுங் கண்டு, இவர் மகா இலட்சுமிக்கு ஒத்தவள் என்று நினைத்த பெற்றோரும், மற்ற உறவினர்களும் இவருக்கு இலட்சுமி என்ற பெயரிட்டனர்.

இவ்வண்ணம் சில ஆண்டுகள் சென்ற பிறகு அம்மையவர்கள் தந்தை இராமலிங்க ரெட்டியார், தன் உடல் மட்டும் இவ்வுலகில்

இருக்காது தான் செய்த புண்ணியம் தன்னைப் பற்றித் தொடர்ந்துவரப் பரலோகமடைந்தார்கள்.

ஒரு நாள் தாய் ஆவுடையம்மை தன் இரண்டாம் பாட்டனர் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் ஞாபகார்த்தமாக அவ்விடமிருந்து சிறிதுதூரத்தில் எழுப்பப்பட்டிருக்கும் ஆலயம் சென்று திருவிளக்கேற்றி வரும்படி நெய்யும், திரியும் இலக்குமி அம்மையிடம் கொடுத்தனுப்பினர். தன் தாயின் உத்தரவைச் சிரமேற்கொண்டு இராமலிங்கசுவாமி கோவிலை யடைந்து திருவிளக்கேற்றி, மும்முறை வலமாக வந்து சுவாமி தரிசனம் செய்துவிட்டு வீடு திரும்பினர் இலக்குமி. பின் இதுவே நாள் தோறும் வழக்கமாகியது. இவ்வாருக அம்மையவர்கட்கு நாளுக்குநாள் பக்தி மிகுதியும், உயர்ந்த குணமும், இனிய சொல்லும், அடக்கமும், அமைதியும், சாந்தமும், அன்பும், பிறவுயிர்களிடம்பரிவும் வளர்ந்தன. அறவொழுக்கத்துடன் அழகுமிக்கவராய் வளர்பிறைச் சந்திரன் போல் பலநாட்கள் பலமாதங்கள், பல ஆண்டுகளாகி வளர்ந்து ரக்தாக்ஷி-ஸ்ரீ வைகாசி-மீ 27-உ 1924ம் வருஷம் ஜுன்மீ 9உ திங்கள்கிழமை சுக்கிலபட்சம் சப்தமி திதியன்று பூரணமதிபோல் புஷ்பவதியானர்கள்.

பிறகு, அம்மையவர்கள் ஆலயவழிபாட்டிற்குத் தடை உண்டானதால் தன் தாய் பராமரிப்பில், இல்லத்திலேயே கடவுள் பிரார்த்தனைக்குரிய ஏற்பாடுகள் யாவும் செய்து சகுண உபாசனைசெய்துவரும் நாளில் சில சமயம் மௌனமாகவும் மெய்மறந்தும், தெய்வ எண்ணமிகுதியால் பாடியும், பித்தரைப்போல் பிதற்றியும், சதாகாலமும் சிந்தித்துப் புலம்பிக் கொண்டிருப்பார்கள். அது சமயம் தன் தாயும் தன் தமையன் சங்கர நாராயண ரெட்டியாரும் மற்ற உறவினரும் பார்த்து நமது குமாரி இலக்குமிக்குக் கூடிய சீக்கிரம் மணவினை முடிக்க வேண்டுமென்று கருதி அறிவு, அடக்கம், சாந்தம், ஞானம் சீலம் படைத்தவரும் தெய்வ பக்தியுடன் கூடிய திருவேங்கட இராமானுஜ தாஸருக்கு இரண்டாவது இல்லக்கிழத்தியாக இலக்குமி யம்மையவர்களைச் சகல சம்பிரம வைபவங்களுடன் திருமணம் செய்து வைத்தார்கள். கணவனும், மனைவியும் கருத்தொருமித்துக் கண்ணும் மணியும் போல நகமும் சதையும்போல, உடலும் உயிரும் போல மனமொத்தவர்களாய் விருந்தோம்பல், விரதம், தானம், தருமம், தயை, ஜீவகாருண்யம், பக்தி

மிக்கவர்களாய் இல்லற வாழ்க்கையை நல்லறமாக நடாத்தி வந்தார்கள். அம்மையவர்களும் தன் பதிக்கு அரசனுக்கு அமைச்சர் போலும், சேய்க்குத் தாய்போலும், தெய்வப்புலவர் திருவள்ளுவருக்கு வாய்த்த வாசுகி அம்மையவர் களைப்போலும், அறுசுவை யடிசில் பாகம் செய்வதுர், சொல் கடவாது நடப்பதுமாய் அன்புடன் உதவி ஐந்தாண்டு காலம் வாழ்க்கையை இனிது நடாத்தி வந்தார்கள். இவர்கள் வாழ்க்கையில் பொருமையுற்ற கூற்றுவன் இவர்களைப் பிரிக்கச் சதிசெய்தான்போலும். அம்மையவர்களை இவ்வுலகில் தனியே விடுத்துக் குறுகிய காலத்தில் இவரது கணவர் இவ்வுலக உடலாகிய தூல சரீரத்தை விட்டு யாதனுசரீரியாய் புண்ணிய லோகமாகிய பரலோகமடைந்தார். அம்மையவர்கள் அன்பும் கருணையுமிக்க தன் கணவரை யிழந்த வியாகூலத்தினுல் யாது செய்வது, எவ்வாறு வாழ்க்கையை நடாத்துவது என்று ஒன்றும் புரியாதவராய் ஓராண்டு காலம் தெய்வ சிந்தனையோடு கூடி அன்ன ஆகாரமின்றி அவாவறுத்து, விரதம், மௌனம், அடக்கம், ஒடுக்கம், பொறுமை முதலிய உயர் குணங்கள் நிறையப் பெற்று வாழ்ந்து வருபவராயினர்.

பிறகு, தன் தமையனார் சங்கர நாராயண ரெட்டியார் விருப்பத்திற்கிணங்க அம்மையவர்கள் அவர் இல்லத்தில் வசிக்க இசைந்தனர். இளம் பிராயத்தில், இவர்கள் கல்வி கற்காததால் கற்க வேட்கைகொண்டு, தமையன் உதவியை நாடினர். அவர், தங்கையின் விருப்பமறிந்து தமிழ் நெடுங் கணக்கிலுள்ள எழுத்துக்கள் 247-ல் முதல் எழுத்தாகிய அ ஆ அரிச்சுவடியை ஓதி வைத்தார்கள். பின்பு அம்மையவர்கள், திருமுருகன் கடாச்சத்தால் "வருந்தி யழைத்தால் வாராதொன்றில்லை", "முயற்சிதிருவினையாக்கும்', என்ற முதுமொழிக்கிணங்க அல்லும் பகலும் அனவரதமும் கல்விபயில முயன்று வரும்நாளில் கல்விக்கரசியாம் தெய்வவாணி கருணைக் குறிப்பால் இவர்களுக்கு நாளுக்கு நாள் கல்வியும் கருத்தில் வளர்ந்து வந்தது. சிறிது நாட்கள் செல்ல, ஒருநாள்கோவிலூர் பரம்பரையில் வேதாந்த சாஸ்திரம் பயின்றவரும், மனோசவாசனாக்ஷய ஞானப் பியாசம் செய்து வருபவராகிய உயர்திரு அண்ணாமலை ஐயா அவர்களிடம் அம்மையவர்கள் தத்துவத்தை (உண்மையை) விளக்கும் அறிவு நூலாகிய நானா ஜீவவாதக் கட்டளையை மிகுந்த

பக்தி சிரத்தையுடன் பாடங் கேட்டுக் கொண்டார்கள். பின்பு கோவிலூர் ஆதீனத்தில் முறையே சாஸ்திர பாடங்கள் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, தியான பராய் விளங்கும் ஸ்ரீ சுப்பையா என்பவர்களிடம் பாரத யுத்த சமயம் பார்த்தனுக்குப் பகவான் உபதேசித்த கீதையின் சாரமாகிய "கீதாசாரத் தாலாட்டு" என்னும் நூலைக் கிரமமாகப் பாடங்கேட்டார்கள். அதன் பின் சில தினங்கள் சென்று அப்பக்கரை ஆதீனம் ஸ்ரீ மத் முத்துச்சுவாமி அவர்களிடம் நித்தியானுஷ்டான விதியையும், சிவ பஞ்சாட்சர மந்திர உபதேசத்தையும், பின்பு கோவிலூர் பரம்பரையைச் சேர்ந்த சின்னரெட்டிபட்டி ஸ்ரீலஸ்ரீ ரெங்கசாமி ரெட்டியாரிடம் வேதாந்த சாஸ்திர பாடங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிதித்தியாசனம் செய்துவந்தார்கள். சில நாட்கள் தன் தமயன் வீட்டிலுள்ள சத்பணிகளைப் பற்றின்றிப் பராமுகமாகப் பார்த்து வந்தார்கள். சில வருடங்கள் சென்றன. பின்பு சமதமமாதி குணங்கள் நிறைந்த சாது சண்முகானந்த சுவாமியவர்களைக் குருவாக ஏற்று, முறையே வேதாந்த சாஸ்திரமாகிய கைவல்யம், விசாரசந்திரோதயம்,

விசாரசாகரம், பாலபோதம், பிரஹ்மானந்தயுக்தி, ரத்னகரம். பகவத்கீதை, இலக்ஷண கிரந்தங்களைக் கிரமமாகப் பாடங் கேட்டுச் சிந்தித்து விசாரணை செய்து, வைராக்கியங் கொண்டு தெளிந்து, அதனால் மனோநாசம், வாசனக்ஷயம் வந்து தியான பரராய் இருக்கும் நாளில், அம்மையவர்கள் ஒரு நாள் சந்நியாசம் ஏற்றுக்கொள்ள விரும்பி சுவாமி களிடம் தெரிவிக்க, சுவாமிகளும் அம்மையாரின் சாஸ்திர ஆராய்ச்சியையும், அந்தக்கரணத் தூய் மையையும், மெஞ்ஞான அறிவையும், பற்றின்மையான பரிபக்குவ நிலையையும், அறிந்து சர்வ, கர்ம, பரித்யாகமென்னும் சந்நியாசம் விசு ஹூ வைகாசி மீ விசாக நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில் கொடுத்தார்கள். அத்துடன், அம்மையவர்கள் "நித்தியானந்தம்" என்னும் காரணப் பெயர் பூண்டார்கள். சந்நியாச தருமத் திற்கேற்ப அம்மையவர்கள் ஐயம் ஏற்று உண்டு வந்தார்கள். பின், சில நாட்கள் சென்று தாம் கற்ற சத் சாத்திரங்களையும், தானடைந்த ஞான அநுபூதியையும், பேரின்ப வீடாகிய மோக்ஷ சாதனத்தையடைய எண்ணமுள்ள சாதன சதுட்டய சம்பன்ன ஜிஞ்ஞாசுகட்கும், முமுட்

சுக்களுக்கும் அறிய உணர்த்த வேண்டி திருமங் கலம், திருப்பரங்குன்றம், மதுரை, உசிலம்பட்டி, போடி, விருதுநகர், குற்றாலம், இலஞ்சி, திருநெல் வேலி, தூத்துக்குடி, அருப்புக்கோட்டை, இராஜ பாளையம் முதலிய இடங்களுக்கு அம்மையவர்கள் சென்று பக்தியில் பரிசுத்தமடைந்த மனபரிபக் குவர்க்கும், ஆண், பெண், இருபாலர்க்கும் ஞான நூல்களாகிய தத்துவ இலக்கண நூல்கள் பலவற்றையும் தாம் அடைந்த ஞான அனுபவத் தையும், தியான மார்க்கத்தையும், பக்திசெய்யும் பான்மையையும் நன்குக "உள்ளங்கை நெல்லிக் கனிபோல" அறியும்படி உணர்த்தியும் பிரசங்க மூலமாகவும், கருமம், பக்தி, ஞானம் மூலமாகவும் தெளிவு படுத்தினர்கள். சுப்பலாபுரத்தில் சன் மார்க்க சங்கம் ஏற்படுத்தி பல ஆடவர், பெண்டிர் சிறியவர், பெரியவர், முதலிய யாவரையும் நன் மார்க்க நல்லுறவு மிக்க ஞானவான்களாக்கியும் பரன்பக்தியில் பரவசப்படச் செய்தும், அந்தர் யோகங்கள் நடாத்தியும் வருகிருர்கள். மேலும் அம்மையவர்கள் ஜீவன் முக்தி விலட்சணனந்த சுகம் அடைய விக்ருதி ஞூ மாசி மீ அமாவாசை திதியன்று மௌன விரதம் ஏற்றுள்ளார்கள்.

தவிர, உலக மக்களுக்கு உபகாரமாயிருக்கும் பொருட்டுத் தான் கற்ற ஞான சாஸ்திரத்தின் பயனாகவும், ஞான அநுபவத்தின் சாரமாகவும் பல பெரியோர்களின் வாயிலாகக்கேட்ட வாக்கியாநுசாரமாகவும் "வேதாந்த சாஸ்திர சங்கிரகம்" என்னும் நூலை இயற்றியிருக்கிறார்கள். இந் நூல் சுருதி, யுக்தி, அநுபவத்திற்கு ஒத்ததாயும், பல சாஸ்திர இலக்கணங்கள் கொண்டதாயும், படிப்பவர்களுக்கு மிக எளியதாகவும் சங்கை சமாதான (வினா-விடை) வடிவுடையதாகவும் உள்ளதால், இந் நூலை இல்லற வாழ்க்கையில் நல்லறம் நடத்துபவர்களும், இல்லற சாகரத்தில் இடர்ப்பட்டுக் கானவர் வலையில் பட்டு கைதப்பி யோடும் மான் போல இன்ப வீடு அடைய விரும்பியவர்களும் சிறியவர்கள் முதல் பெரியவர்களும், ஆடவர், பெண்டிர் யாவரும் படித்து சிந்தித்துத் தெளிந்து, சமதமாதி சத்துவ குணம் நிறைந்தவர்களாய், சாந்த சொரூபராய், ஜீவன் முக்தர்களாய்ப் பேரானந்தப் பெருவாழ்வை அடைவார்களாக.

ஓம் தத் ஸத்.

இங்ஙனம்,

**ப. ச. ரா. சங்கரநாராயண ரெட்டியார்,**

பே. சுப்பாலாபுரம்.

# ஸ்துதிகள்.



## காப்பு.

ஐங்கரன் அறுமுகவன் அம்பிகையருட் குரவன்
சங்கரன் சரஸ்வதியே காப்பு.

## விநாயகர் ஸ்துதி.

அண்ட பிண்டமா திபாய் நின்ற ஜோதி
அருவுருவாய்த் திருவருளிற் சிறந்த ஜோதி
தொண்டருள்ளங் குடிபாகக் கொண்ட ஜோதி
துன்னுமுயிர்க் காதரவாய மர்ந்த ஜோதி
பண்டு வினைப றுத்தென்னை யாண்ட ஜோதி
பருதி மதிபாகி விளைபாடுஞ் ஜோதி
அண்டினோர்க் கருள்வடிவாய் நின்ற ஜோதி
ஆபபரமைங்கரன் பொற் பாதங் காப்பே.

## முருகன் ஸ்துதி.

மஞ்ஞையி லேறிவரு மறவர் மருகா குருவே
ஜிஞ்ஞா சானஎற்குத் திருவருள் நீதா
அஞ்ஞானந்தனையொழித் தபக்குவி யாயிருந்தவெனை
மெஞ்ஞானந் தனைத்திடமாய் மேவுற நீ செய்தாய்.

### சிவன் ஸ்துதி.

திங்களும் கங்கை நீருஞ்
செஞ்சடை தன்னிற் கொண்டாய்
மங்களமாகத் தானே மங்கை
யோர் பாகங் கொண்டாய்
செங்கையில் மழுவு மானுஞ்
சிறக்கவே யேந்திக் கொண்டாய்
சங்கைக ளெல்லாம் தீர்த்துச்
சங்கரா யெனையாட் கொள்வாய்.

### பராசக்தி ஸ்துதி.

மான வடிவே மரகதமே மாமணியே
ஈனவடியேனுக் கிரங்கி யருளாயே
ஞானக்குயிலே நயந்த அருட்கிளியே
மோன மயிலே முழுதுமெனைக் காவாயே.

### சரஸ்வதி ஸ்துதி

இருவினைக் குள்ளாகி இன்னல்
படா தின்னமும் நான்
சொரூப நிலை யடைந்து
சுகமுறுவான் கருணையுடன்
குரு வடிவாய் வந்திக்
குவலயந் தனி லெழுந்த
திரிபுரையே தினமுமுந்தன்
சீரடிகள் போற்று வனே.

சித்தத்திற் றிகழ் சின்மயானந்தமே
எத்திசையு மிளிர் ஏகாத்வைதமே
சித்பர வெளிதனில் செறிதத் துவமே
பத்மாசனி யாயருள் பாலிப்பாய் பாக்கியமே.

### மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் ஸ்துதி.

ஆலவா யமர் ஆதிசொக் கேசன்
மாலயன் புகழும் மங்கை மீனாக்ஷி
காலபா சத்தைக் கணத்திற் போக்கவே
சீல மொடுநாம் தினமும் போற்றுவாம்.

ஸ்துதிகள் முற்றிற்று.



ஓம் தத் சத்.

# நன்றி மொழி

## பரம குரு.

காயனை அகாய ஞக்கிக்
கண்டனை அகண்ட ஞக்கித்
பேயனைப் பிரம மாக்கிப்
பிறப்பிறப் பில்லா ஞக்கித்
தாயினும் இனியனுக வந்
தெனைத் தடுத்தாட் கொண்ட
நேயசண் முகானந் தப்பேர்
நிமலசற் குருதாள் போற்றி.

## ஞான குரு.

ஆனந்த மான என்றன் அருமைக் குருபரனே
மோனந்தனில் நின்று முத்திவடி வாய் விளங்கிக்
கானந்த னில் நின்று கலங்குமெளி யேன்றனைத்
தானே வந் துய்வித்தாய் தாயே பரா பரையே.

பந்தம தொழிந்து நின்ற
பக்த சிகாமணியே உன்பால்
நிந்தைகள் ஒருவ ரேனும்
நிகழ்வுறச் சொல்லப் போமோ
கந்தனே துணைய தாகக்
கதிர் வேலும் கைக்கொடுத்தான்
இந்தநல் விதத்தில் நீதா
னிருப்பதற் கைய மில்லை.

---

உ

ஓம் தத் சத்.
பரப்பிரஹ்மணே நமஃ

# வேதாந்த சாஸ்திர சங்கிரகம்.

## தேகத்திலுள்ள தத்துவங்கள்.

மோட்சம் அடைய விருப்பம் உள்ளஜீவர்கள் விசாரிக்க வேண்டிய தத்துவங்கள் **36**.

சீவர்கள் எல்லோருக்கும் தேகம் **3**.

1. ஸ்தூல தேகம்.
2. சூட்சும தேகம்.
3. காரண தேகம்.

### தத்துவங்கள் 36-க்கு விளக்கம்.

| | |
|---|---|
| ஸ்தூல சரீர தத்துவம் | 6 |
| சூட்சும சரீர தத்துவம் | 20 |
| காரண சரீராதி தத்துவம் | 5 |
| பஞ்ச பூதம் | 5 |
| ஆக மொத்த தத்துவங்கள் | 36 |

### ஸ்தூல சரீர தத்துவம் 6-க்கு விளக்கம்.

1. சர்மம்
2. உதிரம்
3. மாமிசம்
4. சனுயு
5. அத்தி
6. மச்சை

### மாதாவின் அம்சம்.

சர்மம் என்பது—தோல்
(ரோமம் என்பது—மயிர்)
உதிரம் என்பது—இரத்தம்
மாமிசம் என்பது—கறி

### பிதாவின் அம்சம்.

சனுப்பு என்பது—நரம்பு
அத்தி என்பது—எலும்பு
மச்சை என்பது—மூளை

### சூட்சுமசரீர தத்துவம் 20-க்கு விளக்கம்.

| | |
|---|---|
| அந்தக்கரணம் | 5 |
| ஞானேந்திரியம் | 5 |
| வாயுக்கள் | 5 |
| கர்மேந்திரியம் | 5 |
| ஆகமொத்தம் | 20 |

### அந்தக்கரணம் 5-க்கு விளக்கம்.

1. உள்ளம்
2. மனம்
3. புத்தி
4. சித்தம்
5. அகங்காரம்

1. உள்ளம்:—ஆகாயத்தின் அம்சம். ஆகாயத்தைப்போல் சகல கேள்விகட்கும் இடம் கொடுத்துத் தரிக்கின்றது.

2. மனம்:—வாயுவின் அம்சம். வாயுவைப் போல் சதா அலைகின்றது.

3. புத்தி:—அக்கினியின் அம்சம். அக்கினியைப்போல் இது நல்லது, இது கெட்டது என்று விளக்குகின்றது.

4. சித்தம்:—அப்புவின் அம்சம். அப்புவைப் போல் விடயத்திற்கு இழுத்துச் செல்கின்றது.

5. அகங்காரம்:—மண்ணின் அம்சம். மண்ணைப்போல் கடினமாகக் கோபம் கொண்டு எழும்புவது.

ஞானேந்திரியம் 5-க்கு விபரம்.

1. சுரோத்திரம்
2. துவக்கு
3. சட்சு
4. சிங்குவை
5. கிராணம்

1. சுரோத்திரம்:—காது. அது ஆகாயத்தினிடமாகச் சப்தத்தை அறியும்.

2. துவக்கு:—தோல். அது வாயுவினிடமாக ஸ்பரிசத்தை அறியும்.

3. சட்சு:—கண். அது அக்கினியினிடமாக ரூபத்தை அறியும்.

4. சிங்குவை: —நாக்கு. அது தண்ணீரினிடமாக ரசமாத்திரமான ருசியை அறியும்.

5. கிராணம்:—மூக்கு. அது மண்ணினிடமாக வாசனையை அறியும்.

புலன் 5:—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

அந்தக்கரணமும் ஞானேந்திரியமும் அறிகருவி.

புலனடக்கம்:—காது இருந்தும் செவிடு, வாயிருந்தும் ஊமை, கண்ணிருந்தும் குருடு, நாவிருந்தும் நாவில்லாமை, காலிருந்தும் நொண்டி, ஆண் பெண்ணாயிருந்தும் அலியாகயிருக்க வேண்டும். முக்கிய விஷயத்தில் பிரவிருத்தியும் அமுக்கிய விஷயத்தில் நிவர்த்தியும் வேண்டும்.

வாயுக்கள் 5-க்கு விபரம்.

1. வியானன் 4. சமானன்
2. பிராணன் 5. உதானன்
3. அபானன்

1. வியானன்:—ஆகாயத்தின் அம்சம். ஆகாயத்தைப் போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

2. பிராணன்:—வாயுவின் அம்சம். வாயுவைப் போல இருதயத்திலிருந்து நாசியாதிபரியந்தம் அலையும்.

3. அபானன்:—அக்கினியின் அம்சம். அக்கினியைப் போல சடராக்கினியாக உஷ்ணித்துக் குதத்தைப்பற்றி நின்று உண்ட அன்னபானாதிகளை சீரணிப்பிக்கும்.

4. சமானன்:—அப்புவின் (தண்ணீர்) அம்சம். தண்ணீரைப்போல சரீர நடுவான நாபித்தானத்தினின்று உண்ட அன்னரசங்களை சகலநாடிகளுக்கும் இழுத்துச் செல்லும்.

5. உதானன்:—மண்ணின் (பிருதிவி) அம்சம். மண்ணைப்போல கடினமாக கண்டத்தில் நின்று உண்ட அன்னபானாதிகளைக் கடையும்.

### உபவாயுக்கள் 5-க்கு விபரம்.

| | |
|---|---|
| 1. நாகன் | 4. தேவதத்தன் |
| 2. கூர்மன் | 6. தனஞ்சயன் |
| 3. கிரிகரன் | |

1. நாகன்:—வாந்தி பண்ணி வைக்கிறவன்.

2. கூர்மன்:—இமைத்து விழிப்பிக்கிறவன்.

3. கிரிகரன்:—குறுகுறுத்துத் தும்மச் செய்கிறவன்.

4. தேவதத்தன்:—கொட்டாவி கொள்ளச் செய்கிறவன்.

5. தனஞ்சயன்:—வீங்கச் செய்கிறவன்.

### கர்மேந்திரியம் 5-க்கு விபரம்.

| | |
|---|---|
| 1. வாக்கு | 4. பாயுரு |
| 2. பாணி | 5. உபஸ்தம் |
| 3. பாதம் | |

1. வாக்கு:—வாய். ஆகாயத்தின் அம்சம். ஆகாயத்தினிடமாக வாக்கு வசனிக்கும்.

2. பாணி:—கை. வாயுவின் அம்சம். வாயுவினிடமாக இடுதல், ஏற்றல் செய்யும்.

3. பாதம்:—கால். அக்கினியின் அம்சம். அக்கினியினிடமாக நடக்கும்.

4. பாயுரு:—மலத்துவாரம். தண்ணீரின் அம்சம். தண்ணீரினிடமாக மலசலாதிகளை வெளியே தள்ளும்.

5. உபஸ்தம்:—குறி. மண்ணின் அம்சம். மண்ணினிடமாக சுகத்தைப் பண்ணும்.

## திரிபுடிகள்.

### ஞானேந்திரியங்களின் திரிபுடிகள்.

| அத்தியாத்மம். (இந்திரியம்) | அதிதெய்வம். (தேவதை) | அதிபூதம். (விஷயம்) |
|---|---|---|
| 1. சுரோத்திரம் | திக்குபாலர் | சப்தம் |
| 2. துவக்கு | வாயுபகவான் | பரிசம் |
| 3. சட்சு | சூரியன் | உருவம் |
| 4. சிங்நுவை | வருணன் | இரசம் |
| 5. கிராணம் | அசுவினிகுமாரர் | கந்தம் |

### கர்மேந்திரியங்களின் திரிபுடிகள்.

| | | |
|---|---|---|
| 6. வாக்கு | அக்கினி | வசனம்(கிரியை) |
| 7. பாணி | இந்திரன் | ஏற்றலிடுதல் |
| 8. பாதம் | வாமனர் | நடத்தல்(கமனம்) |
| 9. உபஸ்தம் | பிரஜாபதி | இரதி(போகம்) |
| 10. குதம் | இயமன் | மலநீக்கம் |

### அந்தக்கரண நான்கின் திரிபுடிகள்.

| | | |
|---|---|---|
| 11. மனம் | சந்திரன் | சங்கற்பம்; விகற்பம் |
| 12. புத்தி | பிரஹ்மா | நிச்சயம் |
| 13. சித்தம் | வாசுதேவன் | சிந்தித்தல் |
| 14. அகங்காரம் | உருத்திரன் | அகந்தை |

### மேற்கூறிய திரிபுடிகளின் சுபாவமாவன.

மும்மூன்று பதார்த்தங்களுள்ள திரிபுடிகளில் ஒன்றில்லையாயின் அதனதன் வியவகாரம் நடவாது.

இந்திரியமும், தேவதையுமிருந்து அதன் விஷயமில்லையாயின் வியவகாரம் நடவாது.

விஷயமும் இந்திரியமும் இருந்து தேவதை யில்லாவிடினும் வியவகாரம் நடவாது. இதனைச் சகல திரிபுடிகளிலும் அறிக.

### காரண சரீராதி தத்துவங்கள் 5-க்கு விளக்கம்.

1. அவித்தை
2. மாயை (வித்தை)
3. சீவன்
4. ஈஸ்வரன்
5. பிரமம்

அவித்தை:—தனக்குள்ளிருக்கும் நித்தியமான ஆத்மாவைச் சீவனுக்குந் தெரியவொட்டாமல் மறைப்பது.

மாயை(வித்தை):—எங்கும் நிறைந்த பிரமத்தை ஈஸ்வரனுக்கு மறைத்து உலகத்தோற்றங்களை உண்டாக்கச் செய்கிறது.

சீவன்:—ஆத்மாவை மறந்து தேகத்தை நிச மென்றும், தாய், தந்தை, பெண்டு, பிள்ளைகளை நிசமாகவும் கொண்டிருப்பது.

ஈஸ்வரன்:—எங்கும் நிறைந்த பிரமத்தை மறந்து சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், (மறைப்பு) அநுக்கிரகம் என்ற ஐந்து தொழில்களையும் என்னுடையதென்று கொண்டிருப்பது.

பிரமம்:—எங்கும் நிறைந்து, அண்ட பிண்ட சராசரங்களிலும் ஊடுருவியிருப்பது.

## பஞ்ச பூதம் 5-க்கு விபரம்.

1. ஆகாயம்
2. வாயு
3. தேயு
4. அப்பு
5. பிருதிவி

ஆகாயம்—வெளி
வாயு—காற்று
தேயு—அக்கினி
அப்பு—தண்ணீர்
பிருதிவி—மண்

## பஞ்சபூத நிறம்.

ஆகாயத்திற்கு நிறம் கிடையாது.

வாயுவிற்கு நிறம் உத்பூத உருவம் கிடையாது.

தேயுவிற்கு நிறம் சிவப்பு.
அப்புவிற்கு நிறம் வெண்மை.
பிருதிவிக்கு நிறம் மஞ்சள்.

### பஞ்சபூத குணம்.

| | | |
|---|---|---|
| ஆகாயத்திற்கு | சப்தம் | (குணம்) |
| வாயுவிற்கு | சப்த ஸ்பரிசம் | ஷை |
| தேயுவிற்கு | சப்த, ஸ்பரிச, ரூபம் | ஷை |
| அப்புவிற்கு | சப்த, ஸ்பரிச, ரூப, ரசம் | ஷை |
| பிருதிவிக்கு | சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் | ,, |

### கோசம் 5-க்கு விபரம்.

1. அன்னமயகோசம் 4. விஞ்ஞானமயகோசம்
2. பிராணமயகோம் 5. ஆனந்தமயகோசம்
3. மனோமயகோசம்

| | |
|---|---|
| **அன்னமயகோசம்:—** | ஸ்தூல சரீரம் |
| பிராணமயகோசம்<br>மனோமயகோசம்<br>விஞ்ஞானமயகோசம் | சூட்சுமசரீரம் |
| **ஆனந்தமயகோசம்:—** | காரண சரீரம் |

பிராணவாயுவும், கர்மேந்திரியங்களும்கூடிப் பிராணமயகோசம்.

மனதும் ஞானேந்திரியமுங்கூடி மனோமய கோசம்.

புத்தியும் ஞானேந்திரியமுங்கூடி விஞ்ஞான மயகோசம்.

## பஞ்சபூத ஒடுக்கம்.

பிருதிவித் தத்துவம் ஒன்று குறைந்தால், சரீரத்தில் மடிப்பு விழும். அப்புப் பூதம் குறைந்தால் நரை, திரை விழும். அக்கினி பூதம் குறைந்தால் காந்தி, பசி, தாகம் குறையும். வாயு பூதம் குறைந்தால் சரீரத்தில் பலவீனம் உண்டாகும். ஆகாயபூதம் குறைந்தால் சரீரம் முடிவடைந்து சிதாகாயமாகிய பிரமமாகப் போகும்.

## குணம் 3-க்கு விளக்கம்.

1. சத்துவ குணம்
2. ரஜோ குணம்
3. தமோ குணம்

1. சத்துவ குணம்:— சாந்தம், இரக்கம் போன்ற நற்குணம் அமைதல்.

2. ரஜோகுணம்:—உலக வாசனை, தேக வாசனை சாஸ்திரவாசனை அமைதல்.

3. தமோகுணம்:—சோம்பல், நித்திரை, மயக்கம், கொட்டாவி போன்ற குணம் அமைதல்.

## ஜாதி 3-க்கு விளக்கம்.

1. உத்தம ஜாதி
2. மத்திம ஜாதி
3. அதம ஜாதி

1. உத்தம ஜாதி:—இகலோக, பரலோகபுத்தியைக் கொடுக்கிற மானிட சரீரம்.

2. மத்திம ஜாதி:- பரலோக புத்தியை மறைத்து, இகலோக புத்தியை மாத்திரம் கொடுக்கிற பசு, பட்சி முதலியன.

3. அதம ஜாதி:—இரண்டு லோக புத்தியையும் மறைக்கும் மரம், செடி, கொடி, கல், மண் முதலியன.

## தோற்றம் 4-க்கு விளக்கம்.

1. சராயுஜம் 3. சுவேதஜம்
2. அண்டஜம் 4. உத்பிஜம்

1. சராயுஜம்:—பையில் கட்டுப்பட்டுப் பிறப்பது.

திருஷ்டாந்தம்—மனிதர்கள், மிருகங்கள் வௌவால் முதலியன.

2. அண்டஜம்—முட்டையில் கட்டுப்பட்டு பிறப்பது.

திருஷ்டாந்தம்—சர்ப்பம், கோழி முதலியன.

3. சுவேதஜம்:—வேர்வையினிடமாகப் பிறப்பது.

திருஷ்டாந்தம்—பேன் மூட்டைப்பூச்சி முதலியன.

4. உத்பிஜம்:—பூமியினிடமாக முளைத்துத் தோற்றுவது.

திருஷ்டாந்தம்—மரம், செடி, கொடி, முதலியன.

## பிறவி 7-க்கு விளக்கம்.

1. தேவர்
2. மனிதர்
3. நடப்பன
4. பறப்பன
5. ஊர்வன
6. நீர்வாழ்வன
7. இருப்பன

1. தேவர்—விண்ணுலகத்தோர்.

2. மனிதர்—மத்திய லோகத்தார்

3. நடப்பன—நடக்கப்பட்ட மனிதர், மிருகங்கள் மற்றுமுள்ளன.

4. பறப்பன—பட்சி ஜாதிகள்.

5. ஊர்வன—ஊர்ந்து செல்லும் பாம்பு முதலியன.

6. நீர்வாழ்வன—நீரில் வாழும் வாத்து, மீன் தவளை முதலியன.

7. இருப்பன—மரம், செடி, கொடி, கல், மலை முதலியன.



உ

ஓம் தத் சத்:

# ஞானத்திற்குரிய லட்சணங்கள்.

## சங்கராச்சாரியார் ஸ்துதி.

---

பங்கயன் மாலுந் தேடிப்
  பார்த்திடா அனந்த பாதன்
மங்கையோர் பாகங் கொண்ட
  மங்கள மான ரூபன்
அங்கையில் நெல்லி போல
  அன்பர்க்கிங் கருள வென்று
பங்கமில் சிருங்கை வந்த
  பரமசங் கரனே போற்றி.

வீட்டிற்கு நான்கு பாதங்களுமில்லாவிடின் வீடு நிலையாததுபோல, சகல கிரந்தங்களும் நான்கு அநுபந்தங்களுமில்லாவிடின் கிரந்தங்கள் அமையா அவற்றையறிந்தாலொழிய விவேகிகளுக்குக் கிரந்தத்தில் பிரவிருத்திபுண்டாகாது. ஆதலால் கிரந்தத்தின் ஆரம்பத்தில் நான்கு அநுபந்தங்களும் அவசியம் சொல்லவேண்டியனவாம்.

ஓம் சத் சத்.

# ஞானத்திற்குரிய லட்சணங்கள்.

---

## வினு-விடை.

1. வினு:— அநுபந்த சதுட்டயத்தின் பெயர் எவை?

விடை:— 1 அதிகாரி. 2 சம்பந்தம். 3 விஷயம். 4 பிரயோஜனம்.

2. வினு:— அநுபந்த லக்ஷணம் யாது?

விடை:— தன்னையறிந்த பின்னர் முமுட்சுவைக் கிரந்தத்தோடு சேர்ப்பிவிப்பது எதுவோ அது அநுபந்தமெனப்படும்.

3. வினு:— அதிகாரி லக்ஷணம் யாது;

விடை:— மலம், விக்ஷேபம், ஆவரணமென்னும் மூன்று தோஷங்களில் மல விக்ஷேபமின்றி ஆவரண தோஷ மாத்திர முள்ளவனும், சாதன சதுட்டய சகிதனும், யுக்தி சாமர்த்திய புத்திமானு மிருப்பவன். இவன் சாஸ்திர விசார மூலமாக ஆத்மஞானத்துக்கும், ஆத்மஞான மூலமாக மோக்ஷத்துக்கும் அதிகாரியாவனென அறிக.

4. வினா:— மலதோஷமாவது யாது?

விடை:— தான் பூர்வசன்மங்களிற் செய்த நிஷித்தகன்ம பலமாகச் சித்தத்திற் பொருந்தியுள்ளபாவ சமஸ்காரமாகிய அசுபவாசனைகளாம்.

5. வினா:— மலதோஷம் எச்சாதனங்களால் நிவிர்த்தியாகும்?

விடை:— வேதயுக்தமான கன்மகாண்டங்களிற் கூறிய நிஷ்காமகன்மம், சகல சீவர்களிடத்திலும் வைக்கப்பட்ட தயை, ஈஸ்வர நாம உச்சாரணமாகிய சாதனங்களால் நிவர்த்தியாகும்.

6. வினா:— விக்ஷேப தோஷம் என்றால் என்ன?

விடை:— சித்தவிருத்தி சிரவணாதிகளிலேனும், ஆத்ம சொரூபத்திலேனும் நிலைபெறாமல் அந்நிய விஷயங்களைப்பற்றி நாநாக்கிரமமாக சலித்தல் என அறிக.

7. வினா:— விக்ஷேபம் எச்சாதனங்களால் நிவர்த்தியாகும்?

விடை:— வேதயுக்தமான உபாசனை காண்டத்திற் கூறிய ஈசுவரத்தியானம், குருத்தியானம், அஜபா மந்திரம், மகாவாக்கியம், பிரணவம், ஈசுவர நாமோச்சாரணமாகிய சாதனங்களால் நிவர்த்தியாகும்.

8. வினா:— ஆவரண தோஷமாவது யாது?

விடை:— உருவ விஷயங்களை அந்தகாரமும், சூரியனை மேகமும், சலத்தைப் பாசியும், மறைத்திருப்பது போலச் சுயம்பிரகாசமாகிய ஆத்மாவை அறியக்கூடாதவண்ணம் மறைத்திருப்பதென அறிக.

9. வினா:— இஃதெதனால் நிவர்த்தியாகும்?

விடை:— அந்தகாரஞ் சூரியோதயத்தால் நிவர்த்தியாதல்போல ஞானோதயத்தால் நிவருத்தியாகுமென அறிக.

10. வினா:— சித்த சுத்திக்கு ஏது எவை?

விடை:— நிர்க்குண உபாசனையாலும், வேதாந்த விசாரணையாலும், குரு பணிவிடையாலும், ஈசுவர உபாசனையாலும் இந்த நான்கில் எதைச் செய்தாலும் சித்தசுத்தியாகும்

11. வினா— நான்கு சாதனங்கள் எவை?

விடை:— 1 விவேகம். 2 வைராக்கியம். 3 சமாதி சட்கசம் பத்து 4 முமுட்சுத்துவம் என்பவை நான்கு சாதனங்களாம்.

12. வினா:— விவேக லக்ஷணம் யாது?

விடை:— ஆத்மா நித்தியமும் (அவிநாசியும்) கிரியையில்லாததும் (அசலமுமாயிருக்கின்றது) ஜகத்து அநித்தியமும் (விநாசியும்) சலனமு (கிரியையுள்ளது) மாயிருக்கின்றது என்று அறிந்து பாலையும், நீரையும் வேறுபிரித்து உண்ணும் அன்னத்தைப்போல சாரமாகிய ஆத்மாவையும் அசாரமாகிய அநாத்மாவையும் திடமாக விசாரித்தல் (வேறு பிரித்தரிதல்) விவேகமாம். இப்படி மனத்தில் நிச்சயம் செய்க.

13. வினா:— வைராக்கிய லக்ஷணம் யாது?

விடை:— இவ்வுலக முதல் பிரம்மலோக பரியந்தமாகிய சகல லோகங்களின் போகத்தையும் பிரமாணயுக்திகளால் தன் சித்தத்தில் அநித்தியமென்றறிந்து, அவற்றைக் காக்கை மலம் போலச் சித்தத்தினின்றும் விடல்வேண்டும். இப்படித் தோஷதிருஷ்டியினால் இகலோக பரலோக போகங்களின் இச்சையை விடுதல் எதுவோ அதுவே வைராக்கியமா மென்று தனது புத்தியிற் கொள்க.

14. வினு:— வைராக்கியம் எத்தனை வகை?

விடை:— மந்தன், தீவிரம், தீவிரதரம் என மூன்றுவகை. புத்திரன், திரவியம் முதலியவற்றின் நாசத்தால் "சி. சை", "ஈதென்ன சம்சாரம்" என்றுண்டாகும் க்ஷணிகபுத்தி விருத்தி மந்த வைராக்கியமாம். இவ்வுலகத்துப் புத்திரன் முதலியவற்றின் சம்பந்தமாகிய சுகத்தின் விருப்ப மின்மை எதுவோ அது தீவிரவைராக்கியமாம். புனரா விருத்திபுடையவைக ளென்றறிந்து சர்வ லோகங்களின் இச்சையையும் விடுதல், தீவிரதர வைராக்கியமாம். அவற்றுள் ஞானத்திற்குக் காரணமாயுள்ள தீவிரதரத்தை முமுக்ஷுவான வன் சம்பாதிக்கவேண்டும்.

15. வினு:— சமதமாதி சட்க சம்பத்து யாது;

விடை:— 1 சமம். 2 தமம். 3 விடல். 4 சகித்தல். 5 சமாதானம். 6 சிரத்தை. என்று ஆறு குணங்களாம்.

சமம்:— விஷயவாசனையாகிய பலத்தினல் உன்மத்தமாகிய மனமென்னும் யானை எதுவோ. அதை விஷயங்களில் அத்தியந்த தோஷ திருஷ்டி

வடிவமாகிய அங்குசத்தினுல் ஜயித்தல் (சுவாதீனஞ் செய்தல்) சமமென்றறிக.

தமம்:— சப்த முதலிய ஐந்து விஷயவடிவமான மார்க்கத்தில் பிரீதியுடைய இந்திரியங்களின் சமுதாயவடிவமான குதிரைகள் எவைகளோ அவைகளை விஷயங்களில் தோஷதிருஷ்டி பூர்வமாகச் சாஸ்திர சிந்தனுதி ரூப சாட்டையினுல் ஜயித்தல் தமமாமென்றறிக.

விடல்:— விடல் என்றாலும் உபரதி என்றாலும் ஒன்றே. ஸ்திரீ, தனம், ஜாதியபிமானம் முதலியவை பொருந்திய சகல கருமங்களையும் துக்கத்திற்கேதுவே யென்றுணர்ந்து அவற்றிற் பிரவேசியாது வெறுத்துவிடலே உபரதியாகும்.

சகித்தல்:—சகித்தல் என்றாலும், திதீட்சை என்றாலும் ஒன்றே. காமக்குரோதாதி குணங்களையடக்குதலும், சுக துக்காதிகள் நேர்ந்தால் இவை பிராரப்தவினைப்படி வந்தவை யெனப் பொறுத்துக் கொள்வதும் சகித்தலாகும்.

சமாதானம்:— சித்தத்தை விடயங்களில் செல்லவொட்டாது தடுத்து, நாம் கேட்டறிந்த ஞான விஷயங்களிலும், ஈசுவர சிந்தனையிலுமே

சதா நிலைத்திருக்கும்படி செய்தலே சமாதானம் எனப்படும்.

சிரத்தை:— சுருதி, குரு, ஈஸ்வரன் இவர்களிடத்தில், இளங்கன்றானது தாய்ப் பசுவினிடத்திற் பிரியம் வைப்பது போல, வைத்திரா நின்ற பிரியத்தோடு சுருதி வாக்கிய குருவாக்கியங்கள் சத்தியமென்றுள்ள விசுவாசமென அறிக.

16. வினா:— சுருதியின்பால் சிரத்தை வைப்பது எதற்கு?

விடை:— பவசாகரத்துக்குக் கப்பலாயும், தாபத்திர யாக்கினிக்கு அமிர்த வருஷமாயும், சலத்தின் கலங்கலாதி மாசுகளை நீக்கிச் சாயை தோன்றும்படி தெளியச் செய்யாநின்ற கதக ரேணுவைப் (தேற்றும் பொடி) போல மனத்திலுள்ள சகல சந்தேகங்களையும் போக்கிப் பொருணிச்சயந் தோன்றும்படி மனத்தைத் தெளிவுபெறச் செய்வதாயிருத்தலினென அறிக.

17. வினா:— குருவின்பாற் சிரத்தைவைப்பது எதற்கு?

விடை:— அஞ்ஞான அந்தகாரத்துக்கு ஞானசூரியனாகவும், மாயா மேகத்துக்குப் பிரசண்டமாருதமாகவும், மகாபாபிகளும் பேதவாதிகளும், தரிசனபரிசனத்தாற் சகல பாவங்களும், சகல பிராந்திகளும் நீங்கி முத்தி யடைவதற்கேதுவாக கருணை, பக்தி, வைராக்கிய பிரஹ்ம ஞானமே சொரூபமாகவும், எழுந்தருளியிருத்தலினென அறிக.

18. வினா:— முமுட்சுத்துவத்தின் லட்சணம் யாது?

விடை:— பசியுள்ள புருஷன் எப்படி அன்னத்தை இச்சிக்கின்றானோ அதுபோலவே மோக்ஷத்தை அடைய உண்டாகும் தீவிர இச்சை எதுவோ, அதனைப் பண்டிதர்களும், நற்குணமுடையவர்களுமாகிய முனிசிரேஷ்டர் (சந்நியாசிகளாகிய ஆசாரியர்)கள் முமுட்சுத்துவமென்று கூறுவர். சொல்லப்பட்ட முமுட்சுத்துவம் சர்வ சாதனங்களுக்கு முன்னரும், மந்தரூபமாய் உண்டாகின்றது. மற்ற சாதனங்கள் வந்தபின் தீவிரமாக உண்டாகின்றது.

19. வினா:— முமுட்சுக்களெத்தனை பிரிவினர்?

விடை:—தீவிரன், மத்திமன், மந்தன், அதி மந்தனென நான்கு பிரிவினராவரென அறிக.

20. வினு:— தீவிர முமூட்சு யாவன்?

விடை:— தாபத்திரய துக்கங்களை சகிக்க முடியாதவனுய்த் துக்ககாரணமாகிய ஈஷணுத்திரயங்களையும், சுட்ட சட்டியைக் கைவிடுவது போல அதிவிரைவாய் விட்டுத்துறந்து, வியாதியாற்றுன்புறுபவன் தகுதியாகிய வைத்தியனைத் தேடி யடைவதுபோலச் சற்குருவைத் தேடி யடைபவனுகும். இவன் இச்சன்மத்திற்றுனே ஜீவன் முத்தனுவனென அறிக.

21. வினு:— மத்திம முமூட்சு யாவன்?

விடை:— ஈடணுத்திரயாபிமானமே சர்வ துக்க காரணமென்பதையும், பிரஹ்மாத்மைக்கிய ஞானமே இவைகளை நிவர்த்தித்து அதீதானந்தமய மோக்ஷத்தைத் தரத்தக்க தென்பதையும், சாத்திரத்தாலும், சற்சங்க வசனத்தாலும், யூகத்தாலும் அறிந்த பின்னும் மனைவி, புத்திராதி குடும்பங்களை விட்டொழிக்க மாட்டாமல் சஞ்சலம் பொருந்திய பாசமனதுடன் கூடியிருப்பவனுவன் இவன் மூன்று சன்மத்திற் ஜீவன் முத்தனுவனென அறிக.

22. வினு;— மந்தமுமுட்சு யாவன்?

விடை:—மோக்ஷமடைதற்குக் காலம் பின்னிருக்கின்றது. இப்போதேன் அவசரப்படவேண்டும் புசிக்கத்தக்க போகங்களனைத்தையும் புசித்துச் செய்யத்தக்க விவகாரங்களனைத்தையும் செய்து முடித்துவிட்டு அதற்குமேல் மோக்ஷ எத்தனஞ் செய்வோ மென்றெண்ணிக் கொண்டிருப்பவனுவன். இவன் யுகாந்தத்தில் முத்தனுவனென அறிக.

23. வினு:—அதிமந்த முமுட்சு யாவன்?

விடை:— வருவது சும்மாயிருக்கினும் வரும் வராதது எந்த எத்தனம் பண்ணினும் வராது. மார்க்கத்திற் செல்பவனுக்கு யாதொரு பிரயத்தனமுமின்றி யெதிரே மாணிக்கமிருந்து கிடைத்தாற்போல, நமக்கும் மோட்சம் கிடைக்குமானுற் கிடைக்கட்டும் பிரயத்தனம் பண்ணவேண்டா மென்றும் மூடபுத்தியோடிருப்பவன். இவன் பல யுகங்கள் செல்லினும் முத்தியடையாதவனுய்ப் பலவித துக்காநுபவி யாகவே யிருப்பானென அறிக.

குறிப்பு:—

[மேற்கூறிய வற்ருேடு ஞானநூலாராய்ச்சி செய்யும் அதிகாரிக்குச் சூட்சும அறிவு இருத்தல் வேண்டும். அதாவது அவன் புத்தி நுட்பமுடையவனு யிருத்தல் வேண்டும்.]

24. வினு:— புத்தி எத்தனை வகைப்படும்? அவையாவன?

விடை:— புத்தி ஐந்து வகைப்படும். 1 மிருத்து புத்தி. 2 தாரு புத்தி. 3 சிலா புத்தி 4 வேணு புத்தி. 5 தைல புத்தி என்பன.

1. மிருத்து புத்தி:— மிருத்து என்ருல் மண் மண் சுவரில் ஆணி யடிப்பதும் மறுபடி பிடுங்கி விடுவதும் மிக்க சுலபமாயிருப்பதைப் போல, குருவிடம் கேட்டவற்றை உடனே யறிந்து கொண்டு சற்று நேரத்திற்குள் அடியோடு மறந்து விடுவதாகும்.

2. தாரு புத்தி:— தாரு என்ருல் மரம். அவற்றுள் பச்சைமரத்தில் ஆணியடிப்பது சுலபம் ஆனல் பிறகு கஷ்டத்தோடு பிடுங்குவதும் சாத்தியமல்ல. அதைப்போல் குருவிடம் கேட்டவற்றைச் சுலபமாக மனத்தில் பதிந்து கொண்டு

அதை மறவாமலும் அதிகந் தெரியாமலும் இருப்பதாம். பட்டமரத்தில் ஆணியடிப்பதும் வருத்தம். அப்படி யடித்தாலும் கொஞ்ச காலத்தில் நழுவி விழுந்து விடும். அதுபோல் கேட்ட விஷயங்கள் புத்தியிற்பதிவது கஷ்டம். அப்படிப் பதிந்தாலும் கொஞ்ச காலத்தில் மறந்து போகும்.

3. **சிலா புத்தி:—** கருங்கல்லில் நாலு துளைகள் செய்து ஒரு துளையில் உளி வைத்தடித்தால் (மற்ற துளைகள் வழியாகவும் பிளந்து) கல் இரண்டாய்ப் பிளந்து விடுவதுபோல், சந்தியான இடங்களில் குறிப்பான ஒரு பொருளைக் கூறினல் அதைக்கொண்டு மற்றவற்றையும் தெரிந்து கொள்வது.

4. **வேணு புத்தி:—** வேணு என்றால் மூங்கில். மூங்கில் கணுவில் ஒரு பக்கம் உளி வைத்தடித்தால் இருபக்கங்கள் பிளந்து கொள்வதுபோல், ஒரு விஷயத்தைக் கேட்டது கொண்டே முன்பின் தொடர்களையும் தெரிந்து கொள்வது.

5. தைலபுத்தி:— தைலம் என்றால் எண்ணெய் கிணற்று ஜலத்தில் ஒரு துளி எண்ணெய்விட்டால் அது ஜலமுழுவதும் பரவி விடல் போல், குரு சுருக்கமாய்க் கூறியதைக் கொண்டே பூரண விஷயங்களையும் தெரிந்து கொள்வதாம். இவற்றில் சிலை, வேணு, தைலங்களைப் போன்ற புத்தியுடையவனே இத்தகைய ஞான நூலைக் கற்க அதிகாரியாவான்.

[இங்கு இன்னொரு விஷயம் கூறவேண்டியது அவசியமாயிருக்கிறது. அதாவது மேற்கண்ட சாதனங்களெல்லாம் கைவந்த பின்புதானே நாம் இந்நூலை ஆராயப் புக வேண்டுமென்று கருதிவிடலாகாது அப்படிக் கருதுவது கடலில் அலை நின்றவுடன் குளிக்கலாம் என்று கருதுவது போலாகும்.]

இச்சாதனங்கள் கைவந்தவன் தன்னைத்தானறிய வேண்டிய வேலையொன்றே பாக்கியன்றி மற்றபடி அவன் ஞானிக்குச் சமானமானவனே. தன்னையறிந்த பின்பே மேற்கண்டவை சுபாவமாய்த் தோன்றும். ஆகையால் முதலில் பக்தி கட்டாயம் வேண்டும். அது எவ்வளவு திடமாயிருக்கிறதோ அவ்வளவு சுலபமாய் யாவும் கைகூடும். ஈசுவரன் மேல் வைத்த பூரண அன்பை வழிகாட்டியாய் முன்னிட்டு மேற்கண்ட

மனத்தையடக்குதல் முதலியவற்றை அப்பியாசித்துக் கொண்டே ஆராய்ச்சியில் தொடங்க வேண்டும். "இதுவே நமது கட்டாயத் தொழில். மற்ற உலக விஷயங்கள் வெறுப்போடு தாட்சணியத்திற்காகச் செய்யும் அந்நியர் வீட்டு வேலை என்றே உறுதியாய் உள்ளத்தில் கருதியிருக்க வேண்டும்"

25. வினு:— குரு லக்ஷணம் யாது?

விடை:— குருக்களில் இரு வகையுண்டு
1. காரியகுரு 2. காரணகுரு

1. காரியகுரு:—தன் ஜீவனார்த்தத்தினிமித் தம் சமயதீட்சை, சரியை, கிரியை, போகங்களைப் பற்றிய போதனைகள் கர்ம காண்டவிதிப்படி ஏற்பட்டுள்ள சடங்குகள் ஆகிய இவற்றைச் செய்பவரே காரிய குரு

2. காரணகுரு:— ஒரு கைம்மாறும் வேண்டாது கருணையால் நமது அஞ்ஞானத்தைப் போக்கி ஞானோபதேசம் செய்து, நமது பிறவிப் பெரும் பிணியை ஒழிப்பவரோ காரணகுரு. இவரே ஞானசிரியர். இவரையே சற்சீடன் சாட்சாத் பரம்பொருளாகவே மதித்து இவருக் கே தன் உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தம் செய்ய வேண்டியவன்.

26. வினா:— சம்பந்த லக்ஷணம் யாது?

விடை:—சம்பந்தங்களின் வேறாய் இரு பொருள்களினுமுள்ளதாய் ஒன்றை யொன்று பற்றியுள்ள இணக்கம், அல்லது ஒற்றுமை யென்னும் உணர்ச்சியைத் தருவது.

27. வினா:— சம்பந்தம் எத்தனை விதம்?

விடை:— பிரதிபாதகப் பிரதி பாத்திய பாவம்; ஜனகஜந்நியபாவம், கர்த்திருகர்த்தவ்விய பாவம், பிராபகப்பிராப்பிய பாவமென சம்பந்தம் பலவிதமாம்.

28. வினா:— இவைகளுக்குள்ள சம்பந்த மெவையெனின்?

விடை:— சாத்திரத்துக்கும், விஷபத்திற்கு முள்ளது பிரதிபாதகப் பிரதிபாத்தியபாவ சம்பந்தம். சொல்கிறது பிரதிபாதகம். சொல்லப்படுகிறது பிரதிபாத்தியமாதலின்விஷயத்தை விளங்கச் சொல்லுகிற சாத்திரம் பிரதிபாதகம். சொல்லப் படுகிற விஷயம் பிரதிபாத்தியமாம். சாத்திரத்துக்கும் ஞானத்துக்குமுள்ளது ஜனக ஜந்நிய பாவ சம்பந்தம். உற்பத்தி செய்கிறது ஜனகம். உற்பத்தியாகிறது ஜந்நியமாதலின் சாத்திரம் விசார

மூலமாக ஞானத்தை யுற்பத்தி செய்கின்றமை யால் ஜனகம். ஞானம் விசாரமூலமாக உற்பத்தி யாகின்றமையால் ஜந்யமாம். அதிகாரிக்கும் விசாரத்துக்குமுள்ளது கர்த்திருகர்த்தவ்வியபாவ சல்பந்தம். செய்கிறவள் கர்த்திரு. செய்யத்தக்கது கர்த்தவ்வியமாதலின் விசாரஞ் செய்யும் அதிகாரி கர்த்திரு. செய்யத்தக்க விசாரம் கர்த்தவ்வியமாம். அதிரிக்கும் பலத்துக்கும் முள்ளது பிராபகப் பிராப்பியபாவ சம்பந்தம். அடைகிறவன் பிராபகன். அடையப்படுகிறது பிராப்பியமாத லின் பலத்தையடைகிற அதிரி பிராபகன். அடையப்படுகிறபலம் பிராப்பியமாம். இவற்றை யன்றி வேறு சம்பந்தங்களுமுள.

29. வினா:—விஷய லக்ஷணம் யாது?

விடை:— ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் பற்றிக் (ஐக்கியம்—ஒருமை) கூறுவது விஷயமாம். எது பிரதிபாதனஞ் செய்ய (சொல்ல)ப்படுகிற தோ அது விஷயமெனப்படும். இந்நூலில் ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவம் பிரதிபாதனஞ் செய் யப்படுகின்றதாகலின், அவ்வேகத்தும் நூலிற்கு விஷயமாம், அதனையே சகல வேதவாக்கியங்களும் பிரதி பாதிக்கின்றன. ஆதலால் ஜீவப்பிரஹ்மங்

களின் பேதத்தைக் கூறுவோர் சடர்களும் (புறங் கூறுவோரும்) வேதத்திற்கு விரோதிகளுமாவர்.

30. வினா:— பிரயோஜனம் எத்தனை வகைப்படும்? பிரயோஜன லக்ஷணம் யாது?

விடை:— பரமப்பிரயோசனம், அவாந்தரப் பிரயோசனமெனப் பிரயோசனம் இரண்டாம். இவ்விரண்டில் துக்கநிவிருத்தி சுகப்பிராப்தி மயமாகிய மோக்ஷம் பரமப்பிரயோசனமாகும். பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் அவாந்தரப் பிரயோசனமாகும்.

31. வினா:— மோக்ஷம் பரமப்பிரயோசனமும், ஞானம் அவாந்தரப் பிரயோசனமு மாகுமென்ப தெதுபோலாகும்?

விடை:— வாழைக்கண் வைத்தவனுக்கு வாழைக்கனி பரமப்பிரயோசனமும், அதனைத் தரத்தக்க தண்டு, இலை, நாருருவமாகிய மரம் அவாந்தரப் பிரயோசனமுமாவது போலாம்.

32. வினா:— நான்கு சாதனங்களையும் அடைந்துள்ள அதிகாரிகள் மேற்செய்பத்தக்கது யாதெனின்.

விடை:— பிணியாளர்கள் பிணியை நிவர்த்திப்பதாகிய ஔடதந்தரத்தக்க பண்டிதரைத் தேடியடைவதுபோல் சம்சாரபந்தங்களை நிவர்த்திப்பதாகிய ஞானனுக்கிரகஞ் செய்யத்தக்க சற்குருவைத் தேடியடைகுதலென அறிக.

33. வினு:— அதிகாரிகள் குருவைத்தேடியடையுங் கிரமம்யாதெனின்.

விடை:— கிராதகர் வலையிலகப்பட்டு அவ்வலையைக் கிழித்துக் கொண்டு ஓடாநின்ற மானனது, பின்னும் வேடர்குடிசிலாகிய கிராமங்களையும். புலியாதி மிருகங்கள் வசிக்கும் மலை, குகை பெருங்காடாதிகளையும், பாலைவனங்களையும் நாடாமல் சீதளமாயும் நிர்ப்பயமாகவுமுள்ள நல்ல ஆரணியங்களை நாடிச் செல்வது போலச் சனன மரண சம்சார துக்கங்கட்குப் பயந்து ஸ்திரீ, தன, புத்திராதிகளின் அபிமானங்களைத் துறந்து வெளிப்பட்ட முமுட்சுவானவன் பின்னும் ஸ்திரீயாதிகளையும், உலகாயத ராதிய பேதவாதிகள் சங்கங்களையும், சன்ம ஏதுவான சரியை, கிரியையாதிகளைப் போதிப்பவரும் பூச்சியத்தன்மை, பொருள், புகழ் நிமித்தம் வேதாந்த சாத்திரங்

ஞானப் போதிப்பவருமாகிய அநாசாரியர்களையும் நாடாமல் பிரதிப்பிரயோசன விருப்பமின்றிக் கிருபாநிமித்தம் ஞானானுக்கிரகஞ் செய்பவராயும் கல்வி, அறிவு, அடக்கம், வைராகம், சிவகாருண்யங்களுள்ளவராயும், பிரஹ்மஞானியாயு முள்ள சற்குருவை மனத்திலன்பும், வாக்கிற்றோத்திரமும் கரத்திலாராதித்தற்குரிய பத்திரபுஷ்பாதிகளுமாகிய இவைகளோடு அதிவிரைவாகத்தேடியவருகிற் சென்று அவர் திருவடியைத் தரிசித்துப் பத்திர புஷ்பங்களாலர்ச்சித்து, சிரமேற்கூவித்த அஞ்சலியஸ்தனாய்ப் பலதரம் வலம் வந்து நமஸ்கரித் தெழுந்து நின்று வாக்காற்றுதித்து, மனதாற் றியானிப்பது குருவையடையுங்கிரமமென அறிக.

34. வினா:— குருவையடைந்த அதிகாரிகள் மேற்செய்யத்தக்கது யாதெனின்.

விடை:— பெருவியாதியாற் றுன்புறுபவன் அவ்வியாதியை நிவர்த்திக்க வல்ல பண்டிதர்பால் தன் வியாதியை நிவர்த்தி செய்ய வேண்டுமெனப் பிரிய வசனங்கள்கூறி, பொருளாதிகளைக் கொடுத்துப் பிரியமுண்டாகும்படி அவர்க்குபசரணை செய்து கொண்டிருப்பது போலச் சம்சாரபந்தங்

களை நிவர்த்திக்கவல்ல சற்குரு சன்னிதானத்தில் நமஸ்கரித்தெழுந்து, கிருபா சொரூபியாகிய சற்குருவே, ஓ சுவாமி, ஓ பகவானே நான் யார்? இந்த நாநா விதமாகிய உலகம் யாது? இது யாருடையது? எனக்குச் சனன மரண சம்சாரம் வந்தவாறேது? இது எதனுல் நீங்கும்? அடியேனுக்கு அநுக்கிரகஞ் செய்தருள வேண்டுமெனச் சமயம் நேர்ந்த போது விண்ணப்பித்துத் தன் திரவிய சரீர, வாக்கு மனங்களைப் பாதகாணிக்கையாக அர்ப்பணஞ்செய்து, குருபரிவாத நிந்தையின்றியவனும், அவைகளைக்கேட்கச் சகியாதவனும், நவவித பக்தியுடையவனும், குருவுக்குத் தன்பாற் கிருபையுண்டாகும்படி ஆத்தம், அங்கம், தானம், சத்பாவமென்னும் பணிவிடையாதிகளைச் செய்து கொண்டு, உடற் சாயைபோலும், ஊசி நூல் போலும். குளிர்காய்பவன் போலும், குருவை விட்டு நீங்காமலிருப்பதென அறிக.

35. வினு:— குருவுக்குச் செய்யும் திரவியார்ப்பணமாவது யாதெனின்.

விடை:— மனைவி, புத்திரன், பூமி, பசு தாசி, தாசன், திரவியம், கிரகம், தானியம் ஆகிய

இவைகட்குத்திரவியம் எனப்பெயராம். குருவானவர் சர்வசங்கப்பரித்தியாகஞ் செய்த துறவியாயின், அவர் இவைகளிலொன்றையும் விரும்பாதவரும், சர்வசங்கப்பரித்தியாகிகளிடத்தில் பிரியருமாக இருப்பவரானமையால் அவர் கருத்துக்கிணங்க இவைகளனைத்தையும் பரித்தியாகம் செய்துவிடுதல் அல்லது கிரகாச்சிரமியாயின் இவைகளனைத்தையும் அவருக்கே உபயோகமாகும்படி தத்தம் செய்து விடுதலென அறிக. இது வேறு வகையான திரவிய அர்ப்பணம்.

36. வினு:— பிரஹ்மவித்துக்களாகிய ஆசாரியர்கள் கிரகாச்சிரமித்திலுமிருப்பார்களோவெனின்.

விடை:— யாக்ஞவல்கியர், உத்தாலகர், வசிஷ்டர் முதலிய ஆசாரியர்கள் கிரகாச்சிரமத்திலிருந்ததாக சாத்திரங்கள் கூறுகின்றமையால் கமலபத்திரோதகங்கள் போலக் கிரகாச்சிரமத்திலும் பற்றியும், பற்றுமலிருப்பார்களென அறிக.

37. வினு:— சரீரார்ப்பணமாவது யாதெனின்.

விடை:— சரீரத்தைச் சதா குருபணியிலும் அவர் கட்டளைக்குக் கொஞ்சமேனும் மாறுமலும் இருக்கும்படி செய்தலென அறிக.

38. வினு:— வாக்கார்ப்பணம் யாதெனின்.

விடை:— குரு வாக்கியமே சகலதாபங்களை யும் சாந்தஞ் செய்வதாகிய தேவாமிர்தமென்னும் திடநம்பிக்கையால், அற்பமேனுந் தோஷ திருஷ்டி யின்றி வாக்கிந்திரியம், குருவையே சதா கீர்த் தித்துக்கொண்டிருக்கும்படி செய்தலென அறிக.

39. வினு:— மனுர்ப்பணம் யாதெனின்.

விடை:— சச்சிதானந்த பரிபூரண சிவ சொரூபமே நம்மை பாட்கொண்டு ரக்ஷிக்கும் பொருட்டுக் கிருபையினுற் குருமூர்த்தமாக எழுந் தருளியிருக்கிறதென்னும் நம்பிக்கையால் ஆசாரி யர் தன்பாற் பிரியமாக இருக்கும்போது இரக்ஷ கர்த்தராகிய விஷ்ணு சொரூபமாகவும், கோப மாக இருக்கும்போது சம்ஹாரகர்த்தராகிய உருத் திர சொரூபமாகவும், இராசத விவகாரத்திருக்கும் போது சிருஷ்டி கர்த்தராகியபிரஹமதேவ சொரூப மாகவும், சாந்தமாக இருக்கும்போது சீதளமாகிய

கங்காதேவிசொரூபமாகவும், உபதேச வசனங்க ளாகிற கிரணங்களாற் சந்தேக விபரீதங்கட்கு மூலமாகிய அஞ்ஞானந்தகாரத்தை நிவர்த்திக்கும் போது சர்வத்தையும் விளக்கிவைப்பதாகிய சூரிய சொரூபமாகவும், கருதி அற்பமேனும் தோட திருஷ்டியின்றிப் பாவிப்பதாகிய ஈசுவரபாவனை மாருதிருக்கும்படி செய்குவதென அறிக.

40. வினு:— குரு பரிவாதம் நிந்தை யெவை யெனின்.

விடை:— குருவின்பாலுள்ள துர்க்குணத் தை எடுத்துரைப்பது பரிவாதமாம். இல்லாத துர்க்குணங்களை யாரோபித்துத் கூறுவது நிந்தை யாம். எவ்விடத்திலிவைகளிருக்கின்றனவோ அவ் விடத்திலிராமல் தன் இருகாதுகளையும் மூடிக் கொண்டு வேறிடத்துக்குச் சென்றுவிட வேண்டு மென அறிக.

41. வினு:—குரு பரிவாதம் நிந்தைசெய்த வரடையும் பலன் யாதெனின்?

விடை:— பரிவாதம் செய்தவனுக்குக் கழுதைச் சென்மமும், நிந்தை செய்தவனுக்கு நாய்ச்சென்மமும் பலனென அறிக.

42. வினு:— ஆசாரியர்பால் வைக்கப்பட்ட நவவித பக்தியாதெனின்.

விடை:— 1. சிரவணம், 2. கீர்த்தனம், 3. ஸ்மரணம், 4. பாத சேவனம், 5. அர்ச்சனம், 6. வந்தனம், 7. தாசபாவம், 8. தோழமை, 9. ஆத்மநிவேதனம். அதாவது தேகாதிகளெல்லாவற்றையும் சமர்ப்பித்தல் என்னும் ஒன்பதுமென அறிக.

43. வினு:— குருவின் பணிவிடை எத்தனை?

விடை:— ஆப்தம், அங்கம், தானம், சத்பாவம் என நான்கு வகைப்படும்.

44. வினு:— குருவிற்குச் செய்யும் பணிவிடைகளிற் ஆப்தப் பணிவிடை யாது?

விடை:— இருவிழிக்கு ஒருமணி போற் சீடனறிவு ஆசாரியர் மனநோக்கப்பிரகாரம் நிற்றலாகிய அநுகூலவிருத்தியென அறிக.

45. வினு:— அங்கப் பணிவிடை யாதெனின்.

விடை:— கண்ணைப் பாதுகாக்கும் இமை போல் ஆசாரியர் அங்கத்தைப் பாதுகாத்தலும், அவர் சரீர சௌக்கியத்திற்குத்தக்க குற்றேவல் புரிதலுமென அறிக.

46. வினு:— தானப் பணிவிடை யாதெனின்.

விடை:— பிதா தன்பொருளைத் தன்னைப் பாதுகாக்கத்தக்க மகற்குக் கொடுத்தல் போலச் சீடன் தன்னைப்பந்தத்தினின்றும் வெளிப்படுத்தி முத்தியிற்சேர்க்கத்தக்க ஆசாரியருக்குக் தன்னுடல் பொருளாவியைத் தத்தஞ்செய்து அவரிருக்குந்தானமாகிய மனை, நில முதலியவற்றைப் பூர்வம் தன் மனை நில முதலியவற்றைப் பாதுகாத்து வந்ததினும் பதின்மடங்கதிகமாகப் பிரியத்தோடு பாதுகாத்து வருதலென அறிக.

47. வினு:— சத்பாவ பணிவிடை யாதெனின்.

விடை:— ஆசிரியரைச் சச்சிதானந்த சிவ சொரூபமாக மனத்திற் பாவித்தலென அறிக.

1. ஈஸ்வரசேவை:— அதிர்ஷ்டபலத்திற்கு ஹேதுவாம்.

2. குருசேவையோ அதிருஷ்டம், திருஷ்டம் என்னும் இரண்டு பலங்களுக்கும் ஹேதுவாகும்.

1. எந்த வஸ்து தர்மாதர்மங்களின் உற்பத்திவாயிலாகப் பலத்திற்கு ஹேதுவாயிருக்கிறதோ, அது அதிருஷ்டபலத்திற்கு ஹேதுவெனப்படும்.

2. எந்த வஸ்து தர்மாதர்மங்களின் உற்பத்தியின்றி நேரே பலத்திற்கு ஹேதுவாயிருக்கின்றதோ அது திருஷ்டபலத்திற்கு ஹேதுவெனப்படும்.

1. ஈசுவரசேவை தர்மத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரணத்தின் சுத்திவடிவ பலத்திற்கு ஹேதுவாகிறது. ஆகலால் ஈசுவரசேவை அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாகும்.

2. குரு சேவை தர்மாபேக்ஷையின்றி ஆசாரியரது பிரசன்னத்தன்மை உபதேசரூப பலத்துக்கு ஹேதுவாயிருத்தலால் திருஷ்டபலத்திற்கு ஹேதுவாம். அன்றியும், குருசேவை தர்மத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரண சுத்திவடிவ பலத்துக்கு ஹேதுவாயிருத்தலால் அதிருஷ்ட பலத்துக்கும் ஹேதுவாகிறது.

இவ்வாற்ருல் ஆசாரிய சேவை ஈசுவர சேவையினும் உத்தமமாம். ஆதலால் ஜிஞ்ஞாசு எல்லாவித்தினுலும் பிரஹ்மவித்தான குருவைச் சேவிக்க வேண்டும்.

48. வினு:— பகிரங்க, சாதனங்கள் எவை?

விடை:— நிஷ்காமகர்மம், நிஷ்காம உபாசனை ஆக இரண்டும் பகிரங்க சாதனங்கள்.

49. வினு:— ஞானத்திற்கு பரம்பரையாக அந்தரங்க சாதனங்கள் யாவை?

விடை:— விவேகம், வைராக்கியம், சமாதி சட்கசம்பத்து, முமூட்சுத்துவம், சிரவணம், மனனம், நிதித்தியாசனம், "தத்" "பத" "துவம்" பதார்த்தங்களின் சோதனை ஆக 8-ம் பரம்பரையாக அந்தரங்க சாதனங்களாம்.

பிரம நிஷ்டராகிய குருமுகமாக மகா வாக்கியார்த்த சிரவணம் செய்தல் ஞானத்தின் சாக்ஷாத் அந்தரங்க சாதனமாம்.

பகிரங்க சாதனம் அந்தக்கரண சுத்திக்கு ஹேதுவாகும். அந்தரங்க சாதனம் ஞானத்திற்கு

ஹேதுவாகும். அந்தரங்கமென்பது சமீபம், பகிரங்கமென்பது தூரத்துள்ளது.

50. வினு:— அந்தரங்க, பகிரங்க சாதனங்களுக்கு திருஷ்டாந்தம் யாது?

விடை:— வில்லிற்பூட்டி விடப்பட்ட பாணம் லக்ஷிய சமீபத்தைச் சென்றடைவதால் அது லக்ஷியத்தைத் துளைக்கும் விஷயத்தில் அந்தரங்க சாதனமாயிருப்பதுபோல விவேகாதிகளெட்டும் ஞானத்தைச் சமீபத்திருப்பதால் ஞானத்திற்கு அந்தரங்க சாதனங்களாகவும், வில்லானது தூரத்திலிருந்துகொண்டு பானத்தைப் பிரயோகித்தல் வாயிலாக லக்ஷியத்தை பிடிக்கும் விஷயத்தில் பகிரங்க சாதனமாயிருப்பது போல யஞ்ஞாதி கருமங்கள், சகுணோபாசனுதிகள் தூரத்திலிருந்துகொண்டு மல விக்ஷேபங்களைப் போக்கிச் சித்தசுத்தித் துவாரா ஞானேச்சையை யுதிப்பிக்கின்றபடியால் ஞானத்திற்குப் பகிரங்க சாதனங்களாகவு மிருக்கின்றன. இவைகளில் அந்தரங் சாதனத்தைச் சம்பாதித்துக் கொண்ட பின்னர்ப் பகிரங்க சாதனத்தைக் கைவிட வேண்டுமென அறிக.

51. வினா:— அந்தரங்க சாதனத்தைச் சம்பாதித்தற்கு முன்னர்ப் பகிரங்க சாதனத்தைக் கைவிடலாகாதென்றது எதனாலெனின்.

விடை:— கிணற்றில் வீழ்ந்து ஓராதாரத்தைப் பிடித்துக்கொண்டு தொங்குகின்ற புருடன் தன்னை வெளிப்படுத்துவற்காக விடப்பட்ட கயிற்றை நன்றாகப் பிடித்துக் கொள்ளுவதற்கு முன்னரே தான் முன்பிடித்திருந்த ஆதாரத்தைக் கைவிடுவானாகில் அவன் எங்ஙனம் சலத்தில் மூழ்கித் துன்புறுவனோ, அங்ஙனம் விவேகமுதலிய மேற்சாதனங்களைச் சம்பாதித்தற்கு முன்னர்த் தான் பூர்வம் கைக்கொண்டிருந்த யஞ்ஞாதிகளைக் கைவிடுவானாகில் உபயப்பிரஷ்டனாய், இகபர சுகத்தையும் மோக்ஷ சுகத்தையுமடையாமல் நரகத்தில் மூழ்கித் துன்புறுவான். ஆதலிற் கைவிடலாகாதென அறிக.

52. வினா:— வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயிக்கும் இலிங்கம் எத்தனை வகைப்படும்?

விடை:—அறுவகைப்படும். அவையாவன:— 1. உபக்கிரமம் உபஸம்ஹாரம். 2. அப்பியாஸம்.

3. அபூர் வதை. 4. பலம்.
5. அர்த்தவாதம். 6. உப பத்தி
என்பனவாம்.

1. உபக்கிரமமாவது பிரகரணத்தின் ஆரம்பம். உப ஸம்ஹாரமாவது பிரகரணத்தின் முடிவு. ஆரம்பத்திற் சொல்லிய அர்த்தத்தையே முடிவிலும் சொல்வது உபக்கிரம உப ஸம்ஹாரங்களின் ஏகரூபமாகிய முதலாவது இலிங்கம.

2. அத்வைதார்த்தத்தை அடிக்கடி சொல்வது அப்பியாஸமாம். யாசகன் தன் பிரயோசனமான ஒரே கருத்தை வெவ்வேறு யுத்திகளால் அத்வைதப் பிரஹ்மத்தை பிரதிபாதிப்பதே அப்பியாஸமாம். இவை இரண்டாவது இலிங்கம்.

3. பிரஹ்மம், உபநிஷத்துக்களொழிந்த மற்றப் பிரமாணங்களால் அறியப்படாதென்றும் ஸ்வயம் பிரகாசமாயிருத்தலால் அந்நியப் பிரமாணங்களை யபேக்ஷிக்கிறதில்லை யென்றும் பிரதிபாதிப்பதே அபூர்வதை. இவை மூன்ருவது இலிங்கம்.

4. அத்வைதப் பிரஹ்மஞானத்துக்கு அநர்த்தங்களின் நிவர்த்தியும், பிரஹ்மத்தின்

பிராப்திபுமே பயனெனச் சொல்வது பலமென் னும் நான்காவது இலிங்கமாம்.

5. பேத ஞானத்தின் நிந்தை வடிவினவும், அபேத ஞானத்தின் ஸ்துதி வடிவினவுமான வாக்கியங்கள் அர்த்தவாத மெனப்படும். இவை ஐந்தாவது இலிங்கமாம்.

6. பிரதிபாதிக்கப்படும் அத்வைதார்த்தத்துக்கு அநுகூலமான திருஷ்டாந்தங்கள் உபபத்தி யென்னும் ஆறுவது இலிங்கமாம். மண்ணிற்கும் அதினுண்டாகிய கடாதிகளுக்கும் பேத மில்லாததுபோலவும், தங்கத்துக்கும் அதனுல் செய்யப்பட்ட நகைகளுக்கும் பேத மில்லாதது போலவும் காரணமான பிரஹ்மத்திற்கும் அதன் காரியமான ஜகத்துக்கும் பேதமில்லையெனப் பிரதிபாதிப்பதே உபபத்தியாம். இவை ஆறுவது இலிங்கமாம்.

இந்த ஆறு இலிங்கங்களாலும் வேதாந்த வாக்கியங்களின் அத்வைதார்த்தத்தை நிச்சயிப்பதே சிரவண மெனப்படும். வேதாந்த சாஸ்திரத்தின் அப்பியாசமும் அதற்கு சாதனமாயிருத்தலின் அதுவும் சிரவணமெனப்படும்.

இவ்விலிங்கங்கள் "சுருதி ஷட்லிங்சசங்கிரகம்" என்னும் நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

53. வி:— சமுசயம் (ஐயம்) எத்தனை?

விடை:— சமுசயம் இரண்டு வகைப்படும். 1. பிரமாண கதசமுசயம். 2. பிரமேய கத சமுசயம்.

1. வேதாந்தத்தில் ஜீவ பிரஹ்மங்களின் பேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதா (சொல்லப் பட்டிருக்கின்றதா) அல்லது அபேதம் பிரதி பாதிக்கப்பட்டிருக்கின்றதா என்பது பிரமாண கத சமுசயம்.

2. ஜீவ பிரஹ்மங்களின் பேதம் சத்தியமா அல்லது அபேதம் சத்தியமா என்பது பிரமேய கத சமுசயம். பிரமாணகத சமுசயம் சிரவணத் தாலும், பிரமேயகத சமுசயம் மனனத்தாலும் நிவர்த்தியாகும்.

54. வி:— வாக்கியம் எத்தனை வகைப் படும்? அதனால் உண்டாவது என்ன?

விடை:— அவாந்தர வாக்கியம், மகா வாக் கிய மென இரண்டு வகைப்படும்.

பரமாத்மாவினது அல்லது ஜீவனது சொரூபத்தை யறிவிக்கும் வாக்கியம் அவாந்தரவாக்கியமெனப்படும். இதனல் பரோக்ஷ ஞானமுண்டாகும். ஜீவ பரமாத்மாக்களின் ஏகத்துவத்தை யறிவிக்கும் வாக்கியம் மகாவாக்கியமெனப்படும். இதனல் அபரோக்ஷ ஞானமுண்டாகும்.

"பிரஹ்மம் இருக்கிறது" என்னும் ஞானம் பரோக்ஷ ஞானம் எனப்படும். "ப்ரஹ்மம் நான்" என்னும் ஞானம் அபரோக்ஷ ஞானம் எனப்படும்.

55. வினு:— அதிகாரிகள் எத்தனை வகை? உபமானம் யாது?

விடை:— மந்தர், மத்திமர், உத்தமர், உத்தமோத்தமர் என நான்கு விதமாயிருப்பார்கள்.

வாழை மரம், ஈரவிறகு, சுள்ளி விறகு, கற்பூரம் இவைகள் முறையே ஒன்றற் கொன்று சீக்கிரத்தில் நெருப்புப் பற்றக்கூடிய ஈரமாதிய தோஷக்குறைவை யுடையனவாயிருப்பது போல மந்தர் முதலிய நால்வரும் ஒருவரைவிட ஒருவர் சீக்கிரத்தில் முத்தியடையக்கூடிய சித்தமலினக் குறைவை யுடையவர்களாயிருத்தலினென அறிக.

எருமை, பறவைக் குஞ்சு, நீர்ப்பாம்பு, புழு இவைகள் முறையே வெயிலைத் தாரதம்மியமாகச் சகிக்குந்தன்மையில்லையோ அவ்வாறு அதிகாரிகள்சமுசார துக்கத்தையும் சகிக்கும் தன்மையில்லை.

இல்லிக்குடம், கிளி, பசுமாடு, அன்னப்பட்சி இவைகள் முறையே கிரகிக்கும் தன்மையில் தாரதம்மியமுடையனவோ அவ்வாறு அதிகாரிகள் குரு சொன்ன பொருளை கிரகிக்கும் தன்மையில் தாரதம்மியமுடையவர்களா யிருக்கின்றனர்.

56. வினா:— மந்தர் முதலிய நால்வரையும் எங்ஙனம் பிரித்தறியலாம்?

விடை:— சாதன சதுட்டயங்கள் எது பரியந்த முள்ளவர்களை மந்தர் எனவும், சொரூப பரியந்த முள்ளவர்களை மத்திமரெனவும், காரிய பரியந்தமுள்ளவர்களை உத்தமரெனவும். அவதி பரியந்தமுள்ளவர்களை உத்தமோத்தமரெனவும் பிரித்தறியலாம்.

இவர்களில் மந்தர் மத்திமர்களிருவருக்கும் யோகமும், உத்தமர் உத்தமோத்தமரென இருவருக்கும் விசாரமும் முக்கியமாகுமென அறிக.

57. வினு:— மந்தர் மத்திமர்களுக்கு எதனுல் யோகம முக்கியம்?

விடை:—மந்தர் மத்திமர்களாகிய இருவருக்கும் சித்த சஞ்சலாதிகள் மிகுதியாயிருக்கும். அவைகளை யோகம் எளிதாய் நிவர்த்தித்து அந்நிவர்த்தித்துவாரா நிருவிகற்பசமாதியை யுண்டுபண்ணுவதாயிருத்தலென அறிக.

58. வினு:— உத்தம உத்தமோத்தர்களிருவருக்கும் விசாரம் எதனுல் முக்கியம்?

விடை:— இருவருக்குஞ் சித்தசஞ்சலாதிகளுக்கேதுவாயுள்ள மலவிக்ஷேபதோடங்களின்றி ஆவரணதோட மாத்திரமிருத்தலின் அதனை விசாரஞானம் எளிபதாய் நிவர்த்தித்து பிரஹ்மசாக்ஷாத்கார நிருவிகற்பசமாதியை யுண்டு பண்ணுவதாகலின் என அறிக. உத்தமோத்தமன் நான்கு சாதனமே திருமேனியாய் விளங்குகிறுன்.

59. வினு:— ஞானத்திற்குரிய சற்குணங்களெவை?

விடை:— அடக்கம், அன்பு, அறிவு, அவாவறுத்தல், இரக்கம், இன்சொல், ஈகை, ஒழுக்கம், சாந்தம், தவம், நடுநிலைமை, வாய்மை, பத்தி ஆக 13.

60. வினா:— பஞ்சக்கிலேசமாவது யாது?

விடை:— (1) அவித்தை (2) அஸ்மிதை (3) இராகம் (4) துவேஷம் (5) அபினிவேசம். என்பன.

அவித்தை:— துக்கத்தில் சுகபுத்தி. அநாத்மாவில் ஆத்மபுத்தி, அநித்தியத்தில் நித்தியபுத்தி. அசுத்தத்தில் சுத்த புத்தி என்பனவாம். இது நான்கு விதமாகிய காரிய அவித்தையாம்.

அஸ்மிதை:— சாக்ஷிபுத்திகளின் ஐக்கிய (ஆத்மாவும் புத்தியும் ஒன்று என்னும்) ஞானம் (சாமானிய அகங்காரம்)

இராகம்:— திட ஆசை (பேராசை)

துவேஷம்:— குரோதம்.

அபிநிவேசம்:— மரணபயம்.

61. வினா:— முக்கரண தோஷங்கள் எவை?

விடை:— தோஷங்கள் 10. 1. திருட்டு. 2. விபசாரம். 3. ஜீவஹிம்சை. இம்மூன்றும் சரீர தோஷங்களாம்.

1. பொய்மொழிதல், 2. பிறர் நிந்தை. 3. கடுஞ்சொல், 4. வீண் பேச்சு. இந்நான்கும் வாக்கின் தோஷங்கள்.

1. இச்சை, 2. சிந்தை, 3. புத்திமந்தத் தன்மை இம் மூன்றும் மனத்தின் தோஷங்கள்.

62. வினா:— தீட்சை எத்தனை? அதற்கு உபமானம் என்ன?

விடை:—1. மனோ தீட்சை. 2. நேத்திர தீட்சை. 3. ஸ்பரிச தீட்சை. 4. வாக்கு தீட்சை என நான்காம்.



உபமானம்:

1. மனோதீட்சை:— ஆமைபோல் மனதில் நினைத்தல்.

2. நேத்திரதீட்சை:— மீன்போல் நேத்திரத்தால் பார்த்தல்.

3. ஸ்பரிசதீட்சை:—பறவைபோல் பரிசத்தால் தடவுதல்.

4. வாக்குதீட்சை:— குழவிபோல் வாக்கினல் சொல்லுதல். (ரீங்காரம் செய்தல்)

63. வினா:— நித்தியப்ராப்தியில் ப்ராப்தி என்றால் என்ன?

விடை:— எப்போதும் மோக்ஷத்தின் அடைவே அடைவு.

64. விஞ:— நித்திய நிவர்த்தியில் நிவர்த்தி என்றால் என்ன?

விடை:— எப்போதும் பந்த நிவர்த்தியே நிவர்த்தி.

65. விஞ:— இலக்கண போதனை யாதெனின்?

விடை:—அறிவிக்கப்படும் இலக்கியத்திற்கு அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவ தோடங்களில்லாத அசாதாரண தருமங்களாகிய சிறப்புத் தன்மையைக் கூறுதலென அறிக.

66. விஞ:— அதிவியாப்தி தோடமாவது யாதெனின்.

விடை:— அறிவிக்கப்படும் இலக்கியத்துக்குக் கூறிய இலக்கணம் மற்றோரிலக்கியத்தினு மிருத்தலாம். அது கோடுள்ளது பசுவெனல் போலுமென அறிக.

67. விஞ:— அவ்வியாப்தி தோடம் யாதெனின்?

விடை:— அறிவிக்கப்படும் இலக்கியத்திற்குக் கூறிய இலக்கணம் அவ்விலக்கியத்தின்

ஏகதேசத்தில்லாதிருத்தலாம். அது பசு, கபில நிறமுள்ளதெனல் போலுமென அறிக.

68. வினு:— அசம்பவ தோடமாவது யாதெனின்.

விடை:— அறிவிக்கப்படுமிலக்கியத்திற்குக் கூறிய இலக்கணம் அவ்விலக்கிய முழுவதினு மில்லாதிருத்தலாம். அது பசு ஒற்றைக் குளம் புடையதெனல் போலுமென அறிக.

69. வினு:— முத்தோடங்களுமின்றிச் சிறந்த விலக்கணம் யாதெனின்.

விடை:—பலவற்றிற்கும் பொதுவாகவின்றி ஒன்றற்கேபுள்ளதும், குறைவும் அபாவமுமின்றி யதுமாகிய இலக்கணமாம். அது கழுத்துத்தாடை, முதுகுக்கொண்டையை யெப்போது முடையது பசுவெனல் போலுமென அறிக.

70. வினு:— பிரமத்திற்குச் சிறந்த இலக்கணம் யாதெனின்.

விடை:— சச்சிதாநந்த இலக்கணமென அறிக.

71. வினு:—புருஷார்த்தமென்பது யாது?

விடை:— சகல புருஷர்களின் இச்சைக்கு எது விஷயமோ அது புருஷார்த்தம்.

72. வினு:— சகல புருஷர்களுக்கும் எதில் இச்சை உண்டாகின்றது?

விடை:— சகல புருஷர்களுக்கும் சர்வதுக்க நிவிருத்தி பரமானந்தப் பிராப்தியில் இச்சை உண்டாகிறது.

73. வினு:— சர்வதுக்க நிவிருத்தி பரமானந்தப் பிராப்தி என்பது யாது?

விடை:— சர்வதுக்க நிவிருத்தி பரமானந்த பிராப்தி யென்பது மோக்ஷத்தின் சொரூபம்.

74. வினு:—மோக்ஷம் எதனுலுண்டாகும்?

விடை:— மோக்ஷம் பிரஹ்ம ஞானத்தினுலுண்டாகும்.

75. வினு:— பிரஹ்ம ஞானமென்பது யாது?

விடை:— பிரஹ்ம ஞானமென்பது பிரஹ்ம சொரூபத்தை யதார்த்தமாக அறிதல்.

76. வினு:— பிரஹ்மஞானம் எத்தனை வகைப்படும்?

விடை:— பிரஹ்மஞானம் பரோக்ஷம் அபரோக்ஷம் என்னும் பேதத்தால் இருவகையாம்.

77. வினு:— பரோக்ஷப் பிரஹ்மஞான மென்பது யாது?

விடை:— 1. சொரூபம்:— சச்சிதாநந்த மாகிய பிரஹ்மம் இருக்கிறதென்று அறிதல் பரோக்ஷப் பிரஹ்ம ஞானமாம்.

78. வினு:— பரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எதனுலுண்டாகும்?

விடை:— 2. எது:— சற்குரு, சத்சாத்திர வசனங்களில் விசுவாசம் வைத்தலால் பரோக்ஷப் பிரஹ்ம ஞானமுண்டாம்.

79. வினு:— பரோக்ஷப் பிரஹ்ம ஞானத்தால் உண்டாவது யாது?

விடை:— 3. பலம்:— அசத்துவாபாதக ஆவரணத்தின் நிவிருத்தி உண்டாம்.

80. வினு:— பரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எப்போது பூரணமாகும்.

விடை:— 4. அவதி:— பரோக்ஷப் பிரஹ்ம ஞானம் பிரஹ்ம நிஷ்ட-குரு, வேதாந்த சாஸ்திரா

நுசாரமாகப் பிரஹ்ம சொரூபத்தை நிச்சயம் செய்யப் பூரணமாகும்.

81. வின:— அபரோக்ஷப் பிரஹ்ம ஞான மென்பது யாது?

விடை;— 1. சொருபம்:— சச்சிதாநந்த மாகிய "பிரஹ்மம் நான்" என அறிதல் அபரோக்ஷப் பிரஹ்ம ஞானமாம்.

82. வின:— அபரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எதனுலுண்டாகும்?

விடை:— 2. ஏது:— ஆசாரியனை உடைய புருஷன் அறிகிறுன் என்னும் சாந்தோக்கிய சுருதி யினல் குருமுகமாகத் தத்துவமஸி முதலிய மகா வாக்கியத்தின் சிரவணத்தால் அபரோக்ஷப் பிரஹ்ம ஞானமுண்டாம்.

83. வின:— அபரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எத்தனை வகையாம்?

விடை:— அபரோக்ஷப் பிரஹ்ம ஞானம் அதிடம் (உறுதியில்லாதது) திடம் (உறுதியானது) என்னும் பேதத்தால் இருவகையாம்.

84. வின:— அதிட அபரோக்ஷப் பிரஷ்ம ஞானமென்பது யாது?

விடை: — 1. சொரூபம்:— அசம்பாவனை விபரீத பாவனைகளோடு உண்டாகும் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயம் அதிட அபரோக்ஷப் பிரஹ்ம ஞானமாம்.

85. வினு:— அதிட அபரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எதனுலுண்டாகும்?

விடை:— 2. எது:— 1. சிறிது மலவிட்க்ஷேபதோஷ முள்ளதாகச்சுருதி நாநாத்துவத்தின் ஞானமும், 2. பிரஹ்மத்தின் அத்வைதத் தன்மையின் அசம்பவ ஞானமும், 3. பேதவாதி பாமர புருஷர்களது சங்கத்தின் சமஸ்காரமும் ஆகிய இவற்ருேடு கூடிய புருஷனுக்கு குருமுகமாக மகாவாக்கிய சிரவணத்தால் அதிட அபரோக்ஷ பிரஹ்ம ஞானம் உண்டாம்.

86. வினு:— அதிட அபரோக்ஷ ஞானத்தால் உண்டவது யாது?

விடை:— 3. பலம்:— அதிட அபரோக்ஷ ஞானத்தால் (1) உத்தமலோகப் பிராப்தியும் (2) புனிதமாகிய ஸ்ரீமான்கள்களது குலத்திலேனும் அல்லது நிஷ்காமத்தன்மையால் ஞானவான்களது குலத்திலேனும் ஜன்மமுண்டாம்.

87. வினா:— அதிட அபரோக்ஷ ஞானம் எப்போது பூரணமாகும்?

விடை:— 4. அவதி:— சத்து சித்து ஆனந்த முதலிய பிரஹ்ம விசேஷணங்களின் அபரோக்ஷ ஞானமுண்டாகியும், சமுசய விபரீத பாவனைகளிருக்குமாயின் அப்போது அதிட அபரோக்ஷ ஞானம் பூரணமாகும்.

88. வினா:— திட அபரோக்ஷ ஞானம் என்பது யாது?

விடை:— 1. சொரூபம்:— அசம்பாவனை விபரீதபாவனைகளில்லாமல் உண்டாகும் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயம் திட அபரோக்ஷ பிரஹ்ம ஞானமாம்.

89. வினா:— திட அபரோக்ஷப் பிரஹ்ம ஞானம் எதனாலுண்டாகும்?

விடை:— 2. ஏது:— குருமுகமாக மகா வாக்கியார்த்தத்தின் சிரவண, மனன நிதித்தியாசனமாகிய விசாரம் செய்வதால் திடஅபரோக்ஷப் பிரஹ்மஞான முண்டாம்.

90. வினா:— திட அபரோக்ஷ ஞானத்தால் உண்டாவது யாது?

விடை:— 3. பலம்:— அபானுபாதக ஆவரணமும், விக்ஷேபமுமாகிய காரியத்தோடு அவித்தையின் அஞ்ஞானத்தின் நிவிருத்தியுண்டாய்ப் பிரஹ்மப் பிராப்தியாகிய மோக்ஷமுண்டாம்.

91. வினா:— திட அபரோக்ஷ ஞானம் எப்போது பூரணமாகும்?

விடை:— 4. அவதி:— தேகத்திலுள்ள நானென்னும் ஞானத்தைப் பாதித்து இதைப் போலப் பிரஹ்ம அபின்னமாகிய ஆத்மாவில் எப்போது ஞானமுண்டாகுமோ அப்போது திட அபரோக்ஷ ஞானம் பூரணமாகும்.

92. வினா:— விசாரமென்பது யாது?

விடை:— 1. சொரூபம்:— ஆத்மாநாத்மாக்களை வேறுபிரித்தறிதல் விசாரமாம்.

93. வினா:— இந்த விசாரம் எதனாலுண்டாகும்?

விடை:— 2. ஏது:— இந்த விசாரம் ஈசுவரன், வேதம், குரு, தனது அந்தக்கரணம் என்னும் இந்நான்கின் கிருபையாலுண்டாகும்.

94. வினு:—இந்த விசாரத்தாலுண்டாவது யாது?

விடை:— 3. பலம்:— இந்த விசாரத்தால் திட அபரோக்ஷ ஞானம் உண்டாம்.

95. வினு:— இந்த விசாரம் எப்போது பூரணமாகும்?

விடை:— இந்த விசாரம் திட அபரோக்ஷ ஞானமுண்டாகுமாயின் பூரணமாகும்.

96. வினு:— சைதன்னிய மென்பது யாது?

விடை:— 1. எது ஞான வடிவாய், 2. சகல கடாதிப் பிரபஞ்சங்களையும் அறிகிறதோ 3. எதை அந்நியமாகிய மன இந்திரியாதிகளெவையும் அறியமாட்டாவோ அது சைதன்னியம்.

97. வினு:— ஜடமென்பது யாது?

விடை:— தன்னை யறியாததும், மற்றவைகளை யறியாததுமான அஞ்ஞானமும், அதனது காரியமாகிய பூத, பௌதிக பதார்த்தங்களும் ஜடமாம்.

98. வினு:— பிரஹ்மத்திற்கு சுத்தலட்சணம் யாது?

விடை:— ஜக ஜீவபரமாகிய (35) தத்துவங் களுக்குள்ள அசுத்த இலக்கணங்களின்றி நித்திய புத்த, முக்த, சத்திய, பரமானந்த அத்துவித மாதிய சுத்த விலக்கணங்களைப் பொருந்திப் பெரி தாகிய அனைத்திற்கும் பெரிதாகி வுள்ளதென்பது தோன்றச் சுத்தப் பிரஹ்மம் என்றுர்.

99. வினு:— ஜக ஜீவப் பரமாகிய 35 தத் துவங்களெவை யெனின்?

விடை:— தூல சரீரதத்துவம் 6 சூக்ஷும சரீர தத்துவம் 20 பூதம் 5 ஜீவன், அவித்தை 2 ஈசுவரன், மாயை 2 என்னும் இவைகளென அறிக.

100. வினு:— தூல சரீரத்திற்கு அசுத்தம் யாது?

விடை:— வாதம், பித்தம், சிலேத்துமம், நவத்துவாரங்களில மலம் ஒழுகுதல், பிறத்தல், வளருதல், இருத்தல், பருத்தல், மெலிதல், காலாந் தரத்தில் பிணமாகுதல் அசுத்தம்.

101. வினு:— சூட்சும சரீரத்துக்கு அசுந் தம் யாது?

விடை:— அபஞ்சிகரண பூதங்களே காரணமாகவும், இராகத்துவேஷ சங்கற்ப நிச்சய பலாபலத்தன்மையாதியவைகளே சொரூபமாகவும், சாக்கடை மலக்குழியாகிய தேசங்களில் வசிக்குங் கிருமிகள் போல மலமூத்திர பூரித பாத்திரமாகிய தூலசரீரத்தில்வசித்தலும்,விருப்பு, வெறுப்பு, தாங்கல், சலித்தல், காண்டல், கேட்டல், வசனித்தலாதியவைகளைப் புரிதலுமே காரியமாகியும், விதேக முத்தியில் நாசமாகுகலே அவதியாகவும், தாபத்திரய துக்கங்களே பலமாகவு முடையதாயிருத்தலினென அறிக.

102. வி:— காரண சரீரமாகிய அஞ்ஞானம் அசுத்தமுடைய தென்பது எதனால்?

விடை:— காரண சூனியமாகவும், அநிர்வாச்சியத்துவமே சொரூபமாகவும், கண்ணுக்கு ரூப விஷயங்களைக் காசபடலாதிகள் மறைத்தல் போலச் சிதாபாசன் அளவில் காலம் சம்சாரத்தில் அமிழ்ந்தி தன் சுபாவ சொரூபத்தை விசாரியாமல் உபேக்ஷித்திருந்தற்கும் தேகாதிகளையானெனதென்றபிமானித்தற்கும் எதுவாக ஆத்மாவை மறைத்தலே காரியமாகவும், பிரஹ்மாத்

மைக்கிய ஞானத்தாற் கெடுதலே அவதியாகவும், நிஷ்பிரயோசனமே பலமாகவுடையதாயிருத்தலி னென அறிக.

103. வினு:— ஜீவன் அசுத்த முடைய னென்பது எதனுலெனின்?

விடை:— தான் தோன்றற்கு அஞ்ஞான மே காரணமாகவும், அதிட்டான, ஆசிரய, ஆபாச சங்காத கர்த்திருத்துவ போக்திருத்துவ ஞாதிருத் துவங்களே சொரூபமாகவும், தேக தருமமான ஜாதி வருணச்சிரம வசத்தனுப் விதிநிடேத கன்மங் களிற் பிரவிருத்திப்பதே காரியமாகவும், பிரஹ்ம மாத்மைக்கிய ஞானத்தால், அவித்தையினேடு கெடுதலே அவதியாகவும், ஜனன மரண தாபத் திரயங்களிற் சுழல்வதே பலமாகவு முடையனு யிருத்தலினென அறிக.

104. வினு:— ஆகாய பூதத்துக்கு அசுத்தம் யாதெனின்?

விடை:— விக்ஷேப சத்தியிற்ருேன்றிக் கெடுதலும், சத்த குணத்தோடு இடி, காற்று, வெயில் மேகப்படலாதிகளை யுற்றிருத்தலுமென அறிக.

105. வினு:— வாயு பூதத்துக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— ஆகாயத்திற்றோன்றிக்கெடுதலும் பரிசகுணத்தோடு சலித்தலும், துர்க்கந்தமாதிகளை யிழுத்தலுமென அறிக.

106. வினு:— அக்கினி பூதத்துக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— வாயுவிற்றோன்றிக் கெடுதலும் ரூபகுணத்தோடு புகை, பொறி, வெப்பமாதிகளை யுற்றிருத்தலுமென அறிக.

107. வினு:— அப்புப் பூதத்துக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— அக்கினியிற் றோன்றிக் கெடுதலும் ரசகுணந்தோடு அலை, திவலை, நுரை, கலங்கல், சேறு, பாசியாதிகளை யுற்றிருத்தலுமென அறிக.

108. வினு:— பிருதிவி பூதத்துக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— அப்புவிற் றோன்றிக் கெடுதலும் கந்தகுணத்தோடு மலம், மூத்திரம், குப்பை, சேரி மயானுதிகளை யுடையதாயிருத்தலுமென அறிக.

109. வினு:—மாயைக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— காரணமின்றியதாகவும், அநிர் வாச்சியத்துவமே சொரூபமாகவும், கூடாததைக் கூட்டுவித்தலும், நாம ரூபப் பிரபஞ்சமாகப் பரி ணமித்தலுமே காரியமாகவும், பிரஹ்மாத்ம வைக் கிய ஞானத்தாற் கெடுதலே அவதியாகவும், நிஷ் பிரயோசனமே பலமாகவுமுள்ளதாயிருத்தலென அறிக.

110. வினு:— ஈசுவரனுக்கு அசுத்தம் யாதெனின்.

விடை:— தான் தோன்றற்கு மாயையே காரணமாகவும், அதிட்டான, ஆசிரய, ஆபாச சங்காதமே சொரூபமாகவும், சிருஷ்டியாதி பஞ்ச கிருத்தியங்களே காரியமாகவும், பிரஹ்மாத்மைக் கிய ஞானத்தால் மாயை கெடும்போது பிரஹ்மத் தில் லயமாகுதலே அவதியாகவும், பிரஹ்ம விஷ்ணு ருத்திராதி மூர்த்தமாக ஆவிர்ப்பவித்தலே பலமாகவுமிருத்தலென அறிக. இவ்வாறு 35 தத்துவமும் அசுத்தம்.

36 ஆம் தத்துவமாகிய பிரஹ்மம் சுத்தம்.

**111.** வினா:— பிரஹ்ம "நித்த" லட்க்ஷணம் யாது?

விடை:— பிரம விலக்கணங்களுள்ளே பிராக பாவம்,பிரத்துவம்சாபாவம்,அந்நியோந்பாபாவம், அத்யந்தாபாவம் என்னும் நான்கு அபாவங்களும் விடுபட்டு சதோதயமாயிருப்பது நித்தம்.

**112.** வினா:— பிரஹ்மம் "புத்த" விலக்கண முடையதென்றது எதனாலெனின்.

விடை:—இயற்கையறிவும், செயற்கையறிவு மின்றிய கடகலசாதிகட்கும், இயற்கையறிவின் றிச் செயற்கையறிவுபோற் றோன்றுநின்ற சரீரத் ரய, சிதாபாச மாயைகட்கும் அந்நியமாயிவைகளனைத்தையும் பிரகாசிப்பித்துக் கொண்டு தானொன் றினாலும் பிரகாசிக்கப்படாமல் சுவயம்பிரகாசத் தன்மையால் நித்தியாபரோக்ஷமாயிருத்தலின் அறியப்பட்டதெனும் புத்தமாமென அறிக.

**113.** வினா:— பிரஹ்மம் "முக்த" விலக்கண முடையதென்றது எதனாலெனின்.

விடை:— எந்தக் காலத்தும் சூரியன் அந்த காரப் பற்றின்றியும், ஆகாயம் வாயுவாதிய நான்கு பூதப்பற்றின்றியுமிருப்பதுபோலப் பிரஹ்மம் அஞ்

ஞானம் அதன் காரியங்களாகிய தேகாதிப்பிர பஞ்சப்பற்றின்றி யிருத்தலினென அறிக.

114. வினு:— பிரஹ்மம் "சத்திய" இலக்கணமுடையதென்றது எதனுலெனின்.

விடை:—தின, மாத, வருட, கால, கற்பங்கடோறும் ஆரோபிதமாகத் தோன்றுநின்ற அவத்தாத்திரயப் பிரபஞ்சங்கட்கு விலக்ஷணமாய் அவைகளுண்டாதற்கு முன்னும் உண்டாகி, அழிந்த பின்னும் மத்தியிலும் தோன்றல், திரிதல், கெடுதலாகிய விகாரங்களையுருமல் ஒரே பிரகாரமாக விளங்கிக் கொண்டிருத்தலினென அறிக.

115. வினு:— பிரஹ்மம் "பரமானந்தம்" "லிலக்கணமுடையது" என்றது யாதெனின்.

விடை:— இஷ்டபதார்த்தங்களான தனம், புத்திரன், சரீர முதலிய விஷயங்களிலுள்ள பிரீதியானது கைவிடப்படினும் தன்பாலுள்ள பிரியம் கைவிடப்படாமல் பரமப் பிரேமைக்கு விஷயமாயிருத்தலால் தானுகிய பிரஹ்மம் பரமானந்த லிலக்கணமுடையதாயிருத்தலென அறிக.

116. வினு:— அத்வைதம் என்ருல் என்ன? உபமானம் யாது?

விடை:— ஸஜாதீய, விஜாதீய, சுவகதபேத ரகிதமாயிருப்பது அத்வைதம்.

உபமானம்:—

சமான ஜாதியுடையதோடுள்ள பேதம் ஸஜாதீயபேதம். அதாவது பிராமணனுக்கு மற்றோர் பிராமணனோடுள்ள பேதம்.

அந்நிய ஜாதியுடையவர்களோடு பேதம் விஜாதீயம். அதாவது பிராமணனுக்குச் சூத்திராதியரோடுள்ள பேதம்.

தனது அவயவங்களோடுள்ள பேதம் சுவகத பேதம். அதாவது பிராமணனுக்குத் தனது அவயவங்களாகிய கை, கால், தலை முதலிய அங்கங்களோடுள்ள பேதம்.

117. வினு:— பிரகிருதியை அநிர்வாச்சியமென்றது எதனாலெனின்.

விடை:— சத்து, அசத்து முதலிய இலக்கணங்களில் இன்ன இலக்கணமுடையதென வசனித்தற்குக் கூடாமையினென அறிக.

118. வினு:— அநிர்வசனீய லட்சணம் யாது?

விடை:— சத்தசத்தின் விலக்ஷணம் அநிர் வசனியமாம்.

மூன்று காலத்திலும் பாதமாகாததனை சத்தென்பார். அதன் விலக்ஷணம் பாதமாவது வந்திபா புத்திரன் போல சொரூபமின்றியதனை அசத்தென்பார். அதன் விலக்ஷணம் சொரூபமுடையது, என்பதனுல் பாதயோக்கிய சொருபமுடையது. சதசத்து விலக்ஷணமாம். அதுவே அநிர்வசனீயமாம்.

119. வினு:— பிரமத்திற்குத் தடத்த லட்சணம் யாது?

விடை:— பிரமத்திற்குத் தடத்த லட்சணம் மாயை.

உபமானம்:—

யாதேனும் ஓர்காலத்தில் ஓர் தேசத்திருப்பதாய், தனது ஆசிரியத்தின் பிரவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது.

உதாரணம்:— காகமுடையது; தேவதத்தன் வீடு என்ருற் போல்வது.

## ஈசுவரன் சற்குணங்கள்.



120. வினா:— ஈசுவரன் சட்குணங்கள் எவை யெனின்.

விடை:— சருவஞ்ஞத்துவம், சருவேசுரத்துவம், சருவாந்திரியாமித்துவம், சருவகாரணத்துவம், சருவநியந்திருத்துவம், சருவசத்தித்துவமாகிய இவைகளென அறிக.

121. வினா:—சருவஞ்ஞத்துவம் யாதெனின்.

விடை:— ஜீவர்கள் மன, மொழி, மெய்களாற் செய்யப்படும் நல்வினை, தீவினையாதிகளனைத்தையும் ஏககாலத்திலறியுந் தன்மையென அறிக.

122. வினா:—சருவேசுரத்துவம் யாதெனின்.

விடை:— இயற்கை ஞானம், பேரருள், முடிவிலாற்றல், வரம்பிலின்பம், வரம்பில்காட்சி, முதலின்மை, அணிமா, மகிமா, கரிமா, இலகிமா: பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவங்களோடு தாயடவுடம்பு, மக்கள், பொன், மணி, அடிமை, வாகனங்களாதிய சகல ஐசுவரியங்களுமுளவாந்தன்மையென அறிக.

123. வினு:— சருவாந் திரியாமித்துவம் யாதெனின்.

விடை:— ஜீவர்களுடைய அந்தக்கரணங் களினுள்ளிருந்து அவரவர்கள் கன்மதாரதன் மியத்துக்குத் தக்கதாகச் சுகதுக்காதி போகங் களை யனுபவிக்கும்படி சூத்திரதாரி, பாவையை யசைப்பதுபோல அசைபிக்கும் பிரேரகத்துவ மென அறிக.

124. வினு:— சருவ காரணத்துவம் யாதெனின்.

விடை:— சிருட்டி, திதி, சங்காரம், திரோ பவம் (மறைப்பு) அனுக்கிரகமென்னும் ஐந்திற் குங் காரணத்தன்மை, அல்லது உபாதானம், நிமித்தமென்னும் இரண்டிற்குங் காரணத்தன்மை யென அறிக.

125. வினு:— உபாதான காரணம் யாது?

விடை:— எது காரிய சொரூபத்திற் பிர வேசித்து அதனேடொற்றுமையுடையதாக இருக்கிறதோ, எதையின்றிக் காரியந் திதிபெரு தோ, எது காரியத்தின் உற்பத்தி திதி லயமாகிய மூன்றற்குங் காரணமோ அது வென அறிக.

126. வினா:— இஃதெது போலுமெனின்.

விடை:— மண், காரியமாகிய கடத்திற் பிரவேசித்து அதனோடொற்றுமை யுடையதா யிருந்தாலும், மண்ணையின்றிக் காரியமான கடந் திதி பெருதிருத்தலும், மண்ணே கடத்தின் உற்பத்தி திதி லயமாகிய மூன்றிற்குங் காரண மாயிருத்தலும் போலுமென அறிக.

127. வினா:—நிமித்த காரணம் யாதெனின்.

விடை:— எது காரிய சொரூபத்திற் பிரவேசியாமல் வேருபிருந்து காரியங்களை யுற்பத்தி செய்கிறதோ, எதன் நாசத்தால் காரியங்கள் கெடுதியடைகிறதில்லையோ, எது காரிய உற்பத்திக்குமாத்திரம் காரணமோ அது வென அறிக.

128. வினா:— இஃதெது போலுமெனின்.

விடை:— குலாலன் கடசொரூபத்திற் பிரவேசியாமல் வேருயிருந்து, கடத்தை யுற்பத்தி செய்தாலும், குலாலநாசத்தால் காரியகடங்கெடா திருத்தலும், குலாலன் கடத்தின் உற்பத்திக்கு மாத்திரங் காரண மாயிருத்தலும் போலுமென அறிக.

129. வினு:— சர்வநியந்திருத்துவம் யாதெனின்?

விடை:— சமுத்திரம் அணைகடவாதிருக்கவும், சோமன், சூரியன், கிரகம், நக்ஷத்திரம், வாடை, தென்றல், முதலியன கிரமந்தவறுது செல்லவும் நியமிக்குந்தன்மையென அறிக.

130. வினு:—சருவசத்தித்துவம் யாதெனின்.

விடை:— இச்சா, ஞான, கிரியைகள் முதலிய சருவசத்திகளையுடைய தன்மைகளென அறிக.

131. வினு:— உபாதி லக்ஷணம் யாது?

விடை:— எது, தனது ஆசிரியத்தின் (இடத்தின்) சொரூபத்தில் பிரவேசியாமல் அதனைப் பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவிக்கின்றதோ அது உபாதியாம்.

உதாரணம்:—ஆகாயத்திற்குக் கடம் உபாதியாதல்போல அந்தக்கரணம் ஒன்றே பிரமாதாவுக்கு (ஜீவனுக்கு) விசேஷணமாயும் சாக்ஷிக்கு உபாதியாயுமிருக்கின்றது.

132. வினு:— விசேஷண லக்ஷணம் யாது?

விடை:— தனது ஆசிரியத்தின் சொரூபத்தில் பிரவேசித்து, அவ்வாசிரியத்தினை பிறபதார்த்தங்களினின்றும் வேறுபிரித்து அறிவிப்பது விசேஷணம்.

உதாரணம்:— நீலநிறம். கடத்திற்கு விசேஷணமாவது போல.

133. வினு:— காரண வாதம் எத்தனை? அதில் முக்கியம் எது?

விடை:— (1) விருத்தி வாதம் (2) ஆரம்ப வாதம் (3) பரிணமவாதம் (4) விவர்த்தவாதம் என நான்கு.

1. விரிந்த படங் குடி ஆவது போல விருத்தி வாதம்.

2. நூல் படம் (வஸ்திரம்) ஆவதுபோல ஆரம்ப வாதம்.

3. உபாதான காரணத்திற்கு சமான சத்தையுடைய அன்னியதான வேற்று சொரூபத்தைப் பரிணம வாத மென்பர். அதனையே விகாரமென்றும் கூறுவர்.

உதாரணம்:— பாலின் சுபாவம். பால் கெட்டுத் தயிராதல் போல.

4. அதிஷ்டானத்திலும் விசம (குறைந்த) சத்தையுடைய வேற்றுச் சொரூபத்தை விவர்த்த மென்பார். அதனையே கற்பித காரியமென்றுங் கூறுவர்.

உதாரணம்:—ரஜ்ஜுவில் சர்ப்பம்போல. அதில் முக்கியம் விவர்த்த வாதம்.

134. வினு:— ஈசுவரனுக்குச் சொரூபம் யாது?

விடை:— ஆசிரயமாயுள்ள மாயை, அதிற் சிற்பிரதிபிம்பமாயுள்ள ஆபாசம், அவற்றிற் கதிட்டானமாயுள்ள பிரஹ்மம் ஆகிய மூன்றுமென அறிக.

135. வினு:—ஈசுவரனது தர்மங்கள் எவை?

விடை:— சருவசத்தித்துவம், சருவஞ்ஞத் துவம், வியாபகத்துவம், ஏகத்துவம், சுதந்திரத் துவம், சாமர்த்தியத்துவம், பரோக்ஷத்துவம், மாயாவுபாதியுடைமையாகிய எட்டுமென அறிக.

136. வினு:—ஈஸ்வரனுக்குத் தேசம் யாது?

விடை:— அவ்வியாகிருதமாகிய மாயை யென அறிக.

137. வி௵:— ஈசுவரனுக்குக் காலங்கள் எவை?

விடை:— சிருஷ்டி காலம், திதி காலம், பிரளய காலமாகிய மூன்றுமென அறிக.

138. வி௵:— ஈசுவர காரியங்கள் எவை?

விடை:— சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகமாகிய ஐந்துமென அறிக.

139. வி௵:— ஈசுவர சிருட்டியாதிய காரியங்கட்குச் சாமக்கிரியைகள் எவை?

விடை:—சத்துவ, இராசத தாமதங்களென்னும் முக்குணங்களென அறிக.

140. வி௵:— பிரபஞ்ச லக்ஷணம் யாது?

விடை:— சமட்டி, வியட்டி, ஸ்தூல, சூட்சும, காரண தேகங்களும், அவற்றின் அவஸ்தைகளும், தர்மங்களும், பிரபஞ்சம் எனப்படும்.

பிரபஞ்சம் ஐந்தபாவமுடையது:—

1. பிரகாபாவம்—முன்னின்மை.
2. பிரத்துவம்ஸாபாவம்—பின்னின்மை
3. அந்நியோந்நியாபாவம்—ஒன்றிலொன்றின்மை

4. அத்தியந்தாபாவம்—எப்போதுமின்மை
5. சாமயிகாபாவம்—சமயத்திலின்மை

பிரஹ்மம் ஐந்தபாவமின்றிச் சதோதயமா யிருப்பது.

141. வினு:— பஞ்சகிருத்தியம் யாது? அதற்கு மூர்த்திகள் யாவர்? அதற்குப் பிரிவு எப்படி?

விடை:—

| தொழில் | மூர்த்தி | இடம் |
|---|---|---|
| சிருஷ்டி | பிரஹ்மா | நாபி |
| திதி | விஷ்ணு | இருதயம் |
| சங்காரம் | ருத்திரன் | மூலாதாரம் |
| திரோபம் | மகேஸ்வரன் | கண்டம் |
| அநுக்கிரகம் | சதாசிவம் | உச்சி |

| | | |
|---|---|---|
| சிருஷ்டி | எழுவகைப் பிறவிகளின் | படைப்பு. |
| திதி | ஷ | காப்பு |
| சங்காரம் | ஷ | அழிப்பு |
| திரோபம் | ஷ | மயக்கம் |
| அநுக்கிரகம் | ஷ | அருள்தல் |

படைப்பு, காப்பு, அழிப்பு, இம்மூன்றும் உடற் கூறு.

மயக்கம், அருள்தல் என்ற இரண்டும் உயிர்க் கூறு.

142. வினு:— அஞ்ஞான லக்ஷணம் யாது?

விடை:— நான் அறியேனென்னும் விபவ காரத்துக்கு ஹேதுவாகிய ஆவரணம் விட்சேப சத்திகளையுடைய அனுதிபாவரூபம் அநிர்வசனீயம் (அஞ்ஞானம்)

143. வினு:— சீவர்களை அற்ப அறிவினர்களென்றது எதனுல்?

விடை:— முன்பின் ஒன்றையும் ஆலோசியாமல் தேகாதிகளை யானெனதென்னும் அபிமானிகளாயும் ஓர் விஷயத்தை யறியும்போது மற்ருேர் விஷயத்தையறியும் பேரறிவில்லாதவர்களாயும், அறிந்த விஷயத்தை அடிக்கடி மறப்பவர்களாயும், துக்க சீவர்களாயுமிருத்தலினென அறிக.

144. வினு:—சீவர்கட்குச் சொரூபம் யாது?

விடை:— ஆசிரயமாகிய அவித்தை அதினுள்ள சிற்பிரதிவிம்பம், இவற்றிற் கதிட்டானமாகிய கூடஸ்தர் இம்மூன்றுஞ் சேர்ந்துள்ளதென அறிக.

145. வினா:—சீவர்களின் தருமங்கள் எவை?

விடை:— அற்பசத்தித்துவம், அற்பஞ்ஞத்துவம், பரிச்சின்னத்துவம், நானாத்துவம், பரதந்திரத்துவம், சாமர்த்தியமின்மை, அபரோக்ஷத்துவம், அவித்தியாவுபாதியுடைமை ஆகிய எட்டும் தருமங்களாம்.

146. வினா:—சீவர்களுக்குதேசங்கள் எவை?

விடை:— இருதயம், கண்டம், நேத்திரமாகிய மூன்று மென அறிக.

147. வினா:— சீவர்களுக்குக் காலங்கள் எவை?

விடை:—சாக்கிரஞ், சொப்பனஞ், சுழுத்தியாகிய மூன்றுமென அறிக.

148. வினா:— சீவர்களுக்குக் காரியங்களெவை?

விடை:— சாக்கிரமுதல் மோக்ஷ பரியந்தமுள்ள போகமாகிய சம்சாரங்களும், அகந்தை, அபிமானம், ஆசை, கோபமாதிகளுமென அறிக.

149. வினா:— சீவர்கட்குப் போக சாமக்கிரியைகளெவை?

விடை:— தூலஞ் சூட்சுமம் காரணமாகிய மூன்று சரீரங்களுமென அறிக.

**150.** வின:— பிரஹ்ம ஞானம் யாருக்கு உண்டாகும்?

விடை:— அவித்தையிற் பிரதிபிம்பித்த ஆபாசனுக்கு உண்டாகும்.

**151.** வின:— கருமிமுதல் ஆரூடன் வரை பிறவி எத்தனை?

விடை:— கருமிக்கு 100 பிறவி. முமுட்சுக்கு 3 பிறவி, அப்பியாசிக்கு 2 பிறவி, அனுபவிக்கு 1 பிறவி, ஆரூடனுக்குப் பிறவியில்லை.

**152.** வின:—ஆவரணசத்தி, விட்சேபசத்திகளினுடைய தன்மை என்ன? உபமானம் எப்படி?

விடை:— ஆவரணசத்தி —மறைப்பு,

விட்சேபசக்தி—உலகத்தோற்றம்.

இவ்விரண்டு சத்திகளும் இருட்டும், பகலும் போலவாம்,

**153.** வின:— ஆவரணசத்தி யாரை மறைக்கும்? எதனுல் நீங்கும்?

விடை:— ஆவரணசத்தியானது தத்துவ ஞானியையும், ஈசுவரனையுந் தவிர மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷி சைதந்நியம் என்னுமிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிய வொட்டாமல் மறைக்கும்.

இதனால் மறைபட்ட சீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் (தூல சரீர தத்துவம் 6, சூட்சும சரீர தத்துவம் 20, அவித்தை, ஜீவன், பிரஹ்மம் ஆக 3) ஒருமைப்பாடாக நானென்றபிமானிப்பர் இந்த அபிமானத்தை, அகங்காரக் கிரந்தியென்றும், சம்சாரபந்தமென்றும் சொல்லப்படும். சற்குரு கடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் நீங்கி, இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந் தெரிகின்றதே முத்தி.

154. வினா:— பிரகிருதி எதனால் நிவர்த்தி?

விடை:— பரிபூரண ஞானத்தினால் நிவர்த்தி.

155. வினா:— மாயை எதனால் நிவர்த்தி?

விடை:— தற்பதார்த்த சோதனையினால் நிவிருத்தி.

156. வினா:— அவித்தை எதனால் நிவர்த்தி?

விடை:— துவம்பதார்த்த சோதனையினால் நிவர்த்தி.

157. வினா:— ஆவரண சக்தி எதனால் நிவர்த்தி?

விடை:— தத்துவஞானத்தினால் நிவர்த்தி.

158. வினா:— விட்சேபசத்தி யெதனால் நிவர்த்தி?

விடை:— விதேக முத்தியினால் நிவர்த்தி.

159. வினா:— ஞான சாதனத்திற்குத் தத்துவம் எத்தனை?

விடை:— அந்தக்கரணம் 5-ம், ஞானேந்திரியம் 5-ம். ஆக 10-ம் ஞானசாதனத்திற்கு தத்துவங்கள்.

160. வினா:— கிரியா சாதனத்துக்கு தத்துவங்கள் எத்தனை?

விடை:— வாயுக்கள் 5-ம் கர்மேந்திரியம் 5-ம் ஆக 10-ம் கிரியாசாதனத்திற்குத் தத்துவங்கள்.

161. வினா:— பஞ்சீகரணம் எப்படி? அதற்கு உபமானம் எப்படி?

விடை:— ஐந்து பூதமும் பத்தாக்கி, அவை பாதி நன்னுன்காக்கி நந்துதம் பாதி விட்டு நான் கொடு நான்கும் கூட்ட வந்தன தூல பூதம்.

உபமானம்:— ஐ ந் து சிநேகிதர்கள், மா, வாழை, கொய்யா, மாதுளம், ஆஞ்சுப் பழங் களில் ஒவ்வொரு பழத்தை ஒன்றுய்ச் சேர்த்துத் தின்னத் தொடங்கிச் சகலரும் தங்கள் தங்கள் பழத்தை இரண்டிரண்டாகச் செய்து அரை அரைப் பாகத்தைத் தங்கள் பொருட்டு வைத்துக் கொண்டு, மிஞ்சிய அரை அரைப் பங்கை நன் னுன்காக்கி நான்கு சிநேகிதர்களுக்கும் பிரித்துக் கொடுப்பார்களாயின் அப்போது 5 பழங்களும் ஒன்றற்கொன்று கலப்பு உண்டாகிறது போலாகும்.

162. விஞ:— சூட்சும சரீரதத்துவம் தூல சரீரதத்துவத்தில் எத்தனை இடத்தில் இருக்கிறது?

விடை:— பதிமூன்று இடத்திலிருக்கிறது.

163. விஞ:— அதன் விபரம் எப்படி?

விடை:—கர்மேந்திரியங்களுள் (1) வாக்கும், ஞானேந்திரியங்களுள் (2) சிங்குவையும் வாயிலி ருக்கும். (3) பஞ்ச வாயுக்களில் உதானவாயுவும்,

அந்தக்கரணத்தில் (4) மனதும், கண்டத்திலிருக்கும். (5) பிராணவாயுவும், (6) புத்தியும், இருதயத்திலிருக்கும். (7) சமானவாயுவும், (8) சித்தமும், நாபியிலிருக்கும். (9) அபான வாயுவும், கர்மேந்திரியங்களில் (10) பாயுருவும், குதத்திலிருக்கும். (11) வியானவாயுவும் ஞானேந்திரியமான (12) துவக்கும், அந்தக்கரணமாகிய (13) அகங்காரமும், (கோபமும்) சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

மற்றைய சூட்சும சரீர தத்துவங்களான ஏழும் தனித்தனியே யிருக்கின்றன. அவை யாவன. உச்சியிலே (1) உள்ளமும், கருவிழி நுனியிலே (2) சட்சுயிந்திரியமும், காதுக்குள்ளே (3) சுரோத்திரிந்திரியமும், மூக்குநுனியிலே (4) ஆக்கிராணயிந்திரியமும், கழுத்துக்கு மேல் தனித்தனியே இருக்கும்.

(5) கை, (6) கால், (7) குய்யம் இம்மூன்றும் கழுத்துக்குக் கீழே தனித்தனியே இருக்கும்.

164. வி:— தூலதேக லக்ஷணம் யாது?

விடை:— பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களாலாகியதும், கர்மத்தால் தோன்றியதும், சுகதுக்காதி போகங்களுக்கு இடமாயிருப்பதாகியும்,

சட்பாவ விகார முடையது எதுவோ அது தூல சரீரமாம்.

165. வினு:—சூக்ஷ்ம தேகலக்ஷணம் யாது?

விடை:— அபஞ்சீகிருத பஞ்ச மகாபூதங் களாலாகியதும், கர்மத்தால் தோன்றியதும், சுக துக்காதி போகங்களுக்குச் சாதனமாயிருப்பது எதுவோ அதுவே சூக்ஷ்ம சரீரமாம்.

166. வினு:— அவஸ்தை எத்தனை?

விடை:— அவஸ்தை மூன்று.

(1) சாக்கிர அவஸ்தை (2) சொப்பனுவஸ்தை (3) சுழுத்தியவஸ்தை.

167. வினு:— சாக்கிர அவஸ்தைக்கு லக்ஷணம் யாது?

விடை:— சொப்பன, சுழுத்திக்கு வேருய் இந்திரிய, ஜந்நிய ஞானத்திற்கும் இந்திரிய ஜந்நிய சமஸ்காரத்திற்கும் ஆதாரகாலமாயிருப்பது எது வோ அது சாக்கிராவஸ்தை யெனப்படும்.

168. வினு:— சொப்பனுவஸ்தைக்கு லக்ஷணம் யாது?

விடை:— இந்திரியத்தினுல் உண்டாகாத விஷய, கோசர, அந்தக்கரணத்தினது அபரோக்ஷ விருத்தியின் காலம் சொப்பன அவஸ்தை யெனப்படும்.

169. வினு:— சுழுத்தியவஸ்தைக்கு லக்ஷணம் யாது?

விடை:— சுககோசரமும், சுகத்தை விஷயஞ் செய்வதும் அவித்தியா கோசரமுமாகிய அவித்தியா விருத்தியின் காலம் சுழுத்தியவஸ்தை யெனப்படும்.

170. வினு:— சத்தைகள் எத்தனை? லக்ஷணம் யாது?

விடை:— சத்தைகள் மூன்று; அவையாவன:— 1. பிராதி பாசிக சத்தை 2. வியாவகாரிய சத்தை 3. பாரமார்த்திக சத்தையாம்.

1. பிராதிபாசிகசத்தை:—

எது தத்துவஞானமின்றிப் பாதிக்கப்படுகின்றதோ அது பிராதிபாசிக சத்தையாம்.

(உ-ம்) கானல் நீர், கட்டையில் கள்வன்.

2. வியாவகாரிய சத்தை:—

எது தத்துவஞானமின்றி பாதிக்கப்படுகின்ற தில்லையோ அது வியாவகாரிய சத்தையாம்.

(உ-ம்) மாயையும் அதன் காரியமான உலகமும்.

3. பாரமார்த்திகசத்தை:—

எது தத்துவஞானத்தாலும் பாதிக்கப்படு கிறதில்லையோ அது பாரமார்த்திக சத்தையாம்.

(உ-ம்) பிரஹ்மம்.

171. வினு:— ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம் எவ்வாறு கலந்திருக்கிறது?

விடை:— ஜீவன் தன் சரீரமாத்திரமே கலந் திருப்பான். ஈசுவரன் தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடும் கலந் திருப்பான்.

பிரஹ்மம் சகல சரீரத்திலும், சகல பிரபஞ் சத்திலும் நிறைந்தும், அப்பாலும் பத்துத்திக்கை யும் அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

172. வினு:—ஜீவ வியவகார பிரமசிந்தனத் திற்குத் தத்துவம் எத்தனை? அவஸ்தை யாது?

விடை:— ஜீவ வியகாரத்திற்குத் தத்துவங் கள் மூன்று அவையாவன:—

1. ஜீவன் 2. ஈசுவரன் 3. பிரஹ்மம் ஆக அவஸ்தை மூன்று துரியம்.

173. வினு:— சாட்சி வியவகாரத்திற்குத் தத்துவம் எத்தனே? அவஸ்தை யாது?

விடை:— சாட்சி 1.

அஸ்தை—துரியாதீதம்(மனம் பிரமத்தில் லயித்தல்)

174. வினு:— ஈசுவர வியவகாரத்திற்குத் தத்துவம் எத்தனே? அவஸ்தை யாது?

விடை:— 1. ஈசுவரன் 2. பிரமம்.

அவஸ்தை—துரியம்.

175. வினு:— பிரம வியவகாரத்திற்குத் தத்துவம் எத்தனே? அவஸ்தை யாது?

விடை:— பிரஹ்மம் 1.

அவஸ்தை—துரியாதீதம்.

176. வினு:— மனோராச்சிய வியவகாரத்திற்குத் தத்துவம் எத்தனே?

விடை:— அந்தக்கரணம் 5. ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் 5. ஆக தத்துவம் 10.

177. வினா:— தோன்றி ஒடுங்கிய தத்துவம் எத்தனை?

விடை:— தோன்றி ஒடுங்கிய தத்துவம் 35. பிரமத்திற்குத் தோற்றம் ஒடுக்கம் இல்லை.

178. வினா:— பொதுத்தத்துவம் எத்தனை? அதற்குத் தொழில் யாது?

விடை:— பொதுத்தத்துவம் எட்டு. அவையாவன:—

பஞ்சபூதம் 5-ம் மாயை ஈசுவரன் பிரஹ்மம் ஆக மூன்றும் சேர்ந்து எட்டு எனப்படும்.

பிருதிவிதத்துவம் ஒன்று இறக்கில் எல்லோருக்கும் ஆகாரமில்லை. மழை மறுக்கில் எல்லோருக்கும் ஜலமில்லை. தேயு இல்லையானால் பாகமில்லை. வாயு இல்லாவிடில் வாடை தென்றல் இல்லை. ஆகாச மிறக்கில் ஒருவருக்கும் அவகாசமில்லை.

மாயையும், மாயா பிரதிபிம்பமும் (ஈசுவரனும்)இறக்கில் சகல சமயத்திற்கும் தெய்வமில்லை. பிரமம் இல்லையாகின் ஒருவருக்கும் அறிவு இல்லை.

179. வினு:— ஞானத்திற்கு மார்க்கம் எத்தனை?

விடை:— மார்க்கம் இரண்டு.

சுகர் மார்க்கம் ஒன்று. வாமதேவர் மார்க்கம் ஒன்று. ஆக இரண்டு.

உபமானம்:— பட்சி முதலாவதற்கும், எறும்பு இரண்டாவதற்கும் உபமானம்.

இதில் சுகர்மார்க்கம் (பட்சி) மேலானது.

180. வினு:— எப்போதும் தானுகக் காணப்பட்ட தத்துவம் யாது?

விடை:— எப்போதும் தானுகக் காணப் பட்ட தத்துவம் ஒன்று. அதாவது பிரஹ்மம்.

181. வினு:— எப்போதும் தனக்கன்னிய மாகக் காணப்பட்ட தத்துவம் யாது?

விடை:— எப்போதும் தனக்கன்னியமாகக் காணப்பட்ட தத்துவம் ஏழு. அவையாவன பஞ்சபூதம் 5. மாயையும், ஈசுவரனும் இரண்டு. ஆக ஏழு.

182. வினு:— தானுகவும், தனக்கன்னியமாக வும் காணப்படும். அநுபவிக்கப்பட்ட தத்துவம் யாது?

விடை:— தானுகவும் தனக்கன்னியமாகவும் அநுபவிக்கப்பட்ட தத்துவம் இருபத்து எட்டு.

அவையாவன:—

தூல சரீர தத்துவம் 6. சூட்சும சரீர தத்துவம் 20. அவித்தையும் ஜீவனும் 2. ஆக தத்துவம் 28.

விபரம்:— அஞ்ஞான காலத்தில் 28 தத்துவமும் தானுகவும், ஞான காலத்தில் 28 தத்துவமும் தனக்கன்னியமாகவும் அநுபவிக்கப்படும்.

183. வினு:— அவிவேகி தொழில் எப்படி செய்கிறுன்?

விடை:— அவிவேகி இருபத்தெட்டு தத்துவங்களுடைய தொழிலேயும் நான் செய்கிறேனென்றும் இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கின்றேனென்றும் மயங்கித் தொழில் செய்கிறுன்.

184. வினு:— விவேகி தொழில் எப்படி செய்கிறுன்?

விடை:— விவேகி இருபத்தெட்டு தத்துவங்களுடைய தொழிலேயும் நான் செய்ய வில்லேயென்றும், இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான்

புசிக்கவில்லை யென்றும் திடம்படத் தேறித் தொழில் செய்கிறுன்.

185. வினு:— வேதாந்தத்திற்கு யுக்தி எத்தனை?

விடை:— வேதாந்தத்திற்கு யுக்தி இரண்டு. ஆரோபம் ஒன்று. அபவாதம் ஒன்று. ஆக இரண்டு. யுக்தியால் பந்தம், வீடென்று உரைக்கும் வேதாந்தமெல்லாம் இந்த யுக்தியன்றி வேறில்லை.

186. வினு:— ஆரோபம் எத்தனை? அபவாதம் என்றுல் யாது?

விடை:— ஆரோபம் மூன்று. காரண ஆரோபம், சூட்சும ஆரோபம், தூல ஆரோபம்.

அபவாத மென்றுல் மண் குடம் ஆவது போலும், நூல் வஸ்திரமாவது போலும், பொன் ஆவரணம் ஆவது போலும் பிரமமே உலகமாகத் தோற்றும்.

187. வினு:— சிருஷ்டி பட்சங்கள் எத்தனை? அவை யாவன?

விடை:— வேதாந்த சித்தாந்தத்துள் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக்கு அறிவிக்கும்

பொருட்டு அஜாதவாதம், யுகபத்சிருஷ்டி, கிரம சிருஷ்டியென மூன்று பட்சங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன.

உண்மையாகவுள்ளது பிரமமே; தேகாதிப் பிரபஞ்சம் எக்காலத்து மின்றென்னும் பட்சம் அஜாதவாதியாம் இதுவே அதனது முடிவான தீர்ப்பாம்.

சொப்பனவுலகு கிரமமின்றி, மனத்தினின்று முண்டாவது போன்று தேகாதிப்பிரபஞ்சம் கிரமமின்றி பிரமத்தினின்று முண்டாயிற்றென் னும் பட்சம் யுகபத் (ஏககால) சிருஷ்டியாம்.

மகதத்துவம், அகங்காரதத்துவம் சூக்கும பூத முதலியவை முறையே ஒன்றன்பின் னொன்றாக வுண்டாயினவென்னும் பட்சம் கிரம சிருஷ்டி யாம். இச் சிருஷ்டி கனிஷ்டாதிகாரியின் பொருட்டு சொல்லப்பட்டதாம்.

அஜாதவாதமே யுடம்பாடாகக் கூறும் வேதாந்த சித்தாந்தத்திற்குக் கிரம சிருஷ்டியையும் யுகபத்சிருஷ்டியையும் கூறுவதில் கருத்தின்று யினும் மத்திமாதிகாரியும் கனிஷ்டாதிகாரியும் அத் வைதப் பிரமத்தை யறிதற்காக ஜகத்தை நிஷே

திக்க வேண்டியிருத்தலால் அதுபற்றி அஃது (கிரமம், யுகபத் என்னும்) இருவகை சிருஷ்டியையும் கூறிற்றென்றறிதல் வேண்டும்.

188. வினா:— அத்தியாசமென்பது யாது?

விடை:— பிராந்தி (மயக்க) ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கும், பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம்.

189. வினா:— அந்த அத்தியாசம் எத்தனை விதமாம்?

விடை:— ஞானத்தியாசம் அர்த்தாத்தியாசமென்னும் பேதத்தால் அத்தியாசம் இரண்டு விதமாம். அவற்றுள், அர்த்தாத்தியாசமானது கேவல சம்பந்தாத்தியாசம், சம்பந்தசகிதசம்பந்தியத்தியாசம், கேவல தர்மாத்தியாசம், தர்மசகித தர்மியத்தியாசம், அந்நியோந்நியாத்தியாசம், அந்நியதராத்தியாசம் என்னும் பேதத்தால் ஆறுவிதமாம். அல்லது சொரூபாத்தியாசம், சம்சர்க்காத்தியாசம் என்னும் பேதத்தால் அர்த்தாத்தியாசம் இரண்டு வகைப்படும்.

1. முன் சொல்லப்பட்ட ஆறுபேதங்களும் இதில் அடங்கும்.

2. மேலெழுதப்பட்டுள்ள பேதப்பிராந்தி முதலிய ஐவகைப் பிராந்தியும் இதனுள் அடங்கும்.

3. இனி அடுத்துச் சொல்லப்படும் ஆத்மா அநாத்மாக்களினது விசேஷணங்களின் அந்நியோந்நியாத்தியாசமும் இதிற்றானே அடங்கும். அஃது அதன் டிப்பணத்தில் (விளக்கவுரையில்) காட்டப்படும்.

190. வினா:— அகங்காராதி அநாத்மாக்களையும், ஆத்மாவையும் அறிவதில் விசேஷ உபயோகமுள்ள அத்தியாச மெது?

விடை:— அந்நியோந்நியாத்தியாசமாம்.

191. வினா:— அந்நியோந்நியாத்தியாசமென்பது யாது?.

விடை:— பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் (ஒன்றில் ஒன்றன்) அத்தியாசத்திற்கு அந்நியோந்நியாத்தியாச மென்று பெயர்.

192. வினா:— ஆத்மா நாத்மாக்களுக்கும் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) எப்படி அத்தியாசமுண்டாகிறது?

விடை:— சத்து, சித்து, ஆநந்தம், அத்வை

தத்துவம் என்னு மிந்நான்கு விசேஷணங்களாக ஆத்மாவினுடையனவாம்.

அசத்து, ஜடம், துக்கம், துவைதசகிதத்துவம் (துவைதத்தோடுகூடியதன்மை) என்னுமிந்நான்கு விசேஷணங்களும் அநாத்மாவினுடையனவாம்.

துக்கம் துவைதசகிதத்துவம் என்னும் இவ்விரண்டு அநாத்மவிசேஷணங்களும், ஆத்மாவின் ஆநந்தத்தையும், அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன. அதனுல் ஆத்மாவில்,

1. "நான் ஆநந்தரூபனுயும், அத்வைதரூபனுயும் மிருக்கிறேன்" என்னும் ஞானமுண்டாகாமல்,

2. "நான் துக்கியாயும், ஈசுவராதிகளினும் வேருயுமிருக்கிறேன்" என்னும் ஞானம் உண்டாகிறது.

ஆத்மாவின் சத்து, சித்து என்னும் இரண்டு விசேஷணங்களும், அநாத்மாவின் அசத்துவித்தையும், ஜடத்துவத்தையும் மறைக்கின்றன. அதனுல் அநாத்மாவாகிய அகங்காராதிகளில்

1. "அசத்தாயும், ஜடரூபமாயு மிருக்கிறது" என்னும் ஞானமுண்டாகாமல்

2. "இருக்கிறது, விளங்குகிறது" என்னும் ஞானம் உண்டாகிறது.

இவ்வாறு ஆத்மாநாத்மாக்களுக்குப் பரஸ்பர அத்தியாச மிருக்கின்றது.

193. வினு:—கியாதி எத்தனை? முக்கியம் எது?

விடை:— சத்கியாதி, அசத்கியாதி, ஆத்மக்கியாதி, அந்நியதாக்கியாதி, அக்கியாதி, அநிர்வசனியக்கியாதி என ஆறு மதங்களாம்.

வைணவர் முதலியோர் சத்கியாதிவாதிகள். சூனியவாதி அசத்கியாதிவாதி. க்ஷணிக விஞ்ஞானவாதி ஆத்மக்கியாதிவாதி. நியாய வைசேடிகர் அந்நியதாக்கியாதிவாதி. சாங்கிய ப்ரபாகரர் அக்கியாதிவாதி. வியாசர் வேதாந்த பட்சம் அநிர்வசனியக்கியாதி—உடம்பாடு என்று சொல்லியிருக்கிறூர், அது முக்கியம்.

(உ-ம்) ரஜ்ஜுவில் சர்ப்பம் போல உலகம்.

194. வினு:— அநாதி எத்தனை? அதற்கு லக்ஷணம் யாது?

விடை:— அநாதி ஆறு. உற்பத்தில்லாத பொருள் சொருபமாக அநாதியாம் அதாவது சுத்தப்பிரம்மம்.

ஆறு அநாதிகளாவன:—

(1) சுத்தப்பிரஹ்மம். (2) பிரகிருதி. (3) அவற்றின் சம்பந்தம். (4) ஈசுவரன் (5) ஜீவன். (6) அவற்றின் பேதம்.

195. வினா:— அநாதி எத்தனை வகைப்படும் அவையாவன.

விடை:— அநாதி இருவகைப்படும். (அதாவது) நித்திய அநாதி; கற்பித அநாதி.

196. வினா:— நித்திய அநாதி லக்ஷணம் யாது?

விடை:— உற்பத்தியில்லாததாயும், நாசமின்றியதாயு மிருப்பது எதுவோ அதுவே நித்திய அநாதியாம். அதாவது சுத்தப்பிரஹ்மம்.

197. வினா:— கற்பித அநாதி லக்ஷணம் யாது?

விடை:— உற்பத்தியில்லாததாயும், நாசமுடையதாயுமிருப்பது எதுவோ அது கற்பித அநாதியாம். அதாவது 1. பிரகிருதி. 2. அவற்றின் சம்மந்தம். 3. ஈசுவரன். 4. ஜீவன். 5. அவற்றின் பேதம். ஆக ஐந்தும் கற்பித அநாதியாம்.

198. வினு:—ஜீவனுக்கு அவஸ்தை எத்தனை?

விடை:— ஜீவனுக்கு அவஸ்தை ஏழு. அவையாவன:— அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோக்ஷம், அபரோக்ஷம், துக்க நிவர்த்தி, தடையற்ற ஆநந்தம். ஆக ஏழு அவஸ்தைகளாம்.

இவைகளில் முன்கூறிய மூன்றவஸ்தைகளும் பந்தத்திற்கு ஹேது. பின் கூறிய நான்கவஸ்தைகளும் மோக்ஷத்திற்கு ஹேதுக்களாம்.

199. வினு:— ஒரு ஜீவனுக்கு ஏழு அவஸ்தைகள் எப்படிப் பொருந்தும்? உபமானம் உபமேயத்துடன் விளக்குக.

விடை:— தசமன் திருஷ்டாந்தத்தால் பொருந்தும் விளக்கத்திற்குக் கைவல்யத்தில் தத்துவவிளக்கப்படலம் 61, 62, 63, கவிகளைப் பார்க்க

200. வினு:— குருவின் ஸ்துதி யாது?

விடை:— சைதன்யம், சாஸ்வதம், சாந்தம், வியோமாதீதம், நிரஞ்சனம்,நாதபிந்து, களாதீதம், தஸ்மே ஸ்ரீ குருவே நம:

சரீரத்திரயவிலட்சணன் நான்.
அவஸ்தாத்திரயசாட்சி நான்.
பஞ்சகோசாதீதன் நான்.

### வேதம் நான்கு.

1. ருக்; 2. யஜுர்; 3. சாமம்; 4. அதர்வணம் ஆக நான்கு,

### உபநிஷத்து முறையே நான்கு.

1. தைத்திரிய, 2. ஐதிரேய, 3. சாந்தோக்கிய, 4. மாண்டூக்கிய உபநிஷத்துக்களாம்.

### வாக்கிய நான்கு.

பிரஞ்ஞானம் பிரஹ்மம்—அப்பியாசவாக்கியம்.
அகம்பிரமாஸ்மி —அநுபூதிவாக்கியம்.
தத்துவமஸி —உபதேசவாக்கியம்.
அயமான்மாபிரம்ம —சம்மதவாக்கியம்.

201. வினா:— மகாவாக்கியப் பொருள் யாது?

விடை:—

தத்துவமஸி — அது நீயானாய்.
அகம்பிரமாஸ்மி —நான் பிரமமாகிறேன்.
அயமான்மாபிரமம் —இந்த ஆத்மா பிரமம்.

பிரஞ்ஞானம் பிரமம்—ஆராய்ந்து அறிந்த அறிவு பிரமம்.

தத்துவமஸி —உபதேசவாக்கியமாகிறது.

அகம்பிரமாஸ்மி —உபதேச வாக்கியபடி, தத்துவ சோதனை செய்து பார்த்ததில், சரியென்று ஒப்புக்கொண்ட அனுபூதி வாக்கியமாகிறது.

அயமான்மாபிரமம்—நிச்சயித்த வாக்கியம், சரியெனச் சம்மதித்தது.

பிரஞ்ஞானம்பிரமம்—அறிவுதான் பிரமத்துக்கு ரூபமேயொழிய, வேறு வடிவம் இல்லையென ஆகும். மனனம் செய்து, பக்தி பூர்வமாய் இடைவிடாது ஜெபிக்கவேண்டும்.

## தற்பதார்த்த சோதனை.

1. தற்பதம் சமஷ்டி விராட்டு, 2. இரணியகர்ப்பன், 3. அவ்வியாகிருதம் என்னும் சரீரத்திரயமும், 4. சிருஷ்டி, 5. திதி, 6. சங்காரம் என்னும் அவஸ்தாத்திரயமும், 7. வைசுவானரன், 8. சூத்ராத்மா, 9. அந்தரியாமி என்னும் அபிமானத்திரயமும், 10. பிரமமும் சேர்ந்து பத்தும் தற்பதவாச்சியார்த்தமாம். பத்துவாச்சியம் அதில்பிரமம் மாத்திரம் லட்சியம்.

## துவம்பதார்த்த சோதனை.

துவம்பதம், வியஷ்டி, தூலம், சூக்குமம், காரணம் என்னும் சரீரத்திரயமும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் அவஸ்தாத்திரயமும், விசுவன், தைசதன், பிராஞ்ஞன் என்னும் அபிமானத்திரயமும் கூடஸ்த பிரமமும் சேர்ந்து பத்தும் துவம்பதவாச்சியார்த்தம். பத்து வாச்சியம். அதில் கூடஸ்தன் மாத்திரம் லட்சியம்.

201. வி:—விருத்திக்கு லக்ஷணம் யாது? அது எத்தனை வகைப்படும்?

விடை:—பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள தாய சம்பந்தம் விருத்தியெனப்படும். அவ்விருத்தி இருவகைத்து, ஒன்று சக்தி விருத்தி. மற்றொன்று இலட்சணாவிருத்தி யெனப்படும்.

சக்தி விருத்தி:—

சத்தத்தால் பொருளின் ஞானத்தை உண்டாக்குவது சக்தி விருத்தியெனப்படும்.

(உ-ம்) கடபதத்தில், கேட்பவனுக்குக் கலச ரூபமாகிய அர்த்த ஞானத்தை உண்டுபண்ணத் தக்க சாமர்த்தியம் சக்திவிருத்தியாம், அவ்வாறே படபதத்திலும், கேட்பவனுக்கு வஸ்திர ரூபமா

மாகிய அர்த்த ஞானத்தை உண்டுபண்ணத்தக்க சாமர்த்தியம் சக்தி விருத்தியாம். இவ்வாறே சர்வ பதார்த்தங்களிலுங்காண்க. சக்தி, ஆற்றல் என்பன ஒரு பொருட் சொற்கள்.

இலட்சண விருத்தி:—

பொருளை நேராய் அறிவது அல்லது யாதோ ரர்த்தத்தின் ஞானம் பதத்தின் சக்தியினுலுண்டா காமல் இலட்சணையால் உண்டாகுமோ அதுவே பதத்தினுடைய இலட்சண விருத்தி யெனப்படும்.

202. வினு:— நான்கு சேதனம் எவை? உபமானம் யாது?

விடை:—

| சேதனம் | | உபமானம் |
|---|---|---|
| பிரஹ்மம் | — | மகாகாசம் |
| ஈசுவரன் | — | மேகாகாசம் |
| கூடஸ்தன் | — | கடாகாசம் |
| ஜீவன் | — | கடாகாசத்தையுஞ் |

சேர்த்துச் சலாகாசம் ஆக நான்கு வகைப்படும்.

203. வினு:— இலக்கணை எத்தனை? அதற்கு உபமானம் என்ன? எதற்காக இலக்கணை சொல்

லப்பட்டது? மகாவாக்கியத்திற்கு எந்த இலக்கணை பொருந்தும்?

விடை:— விட்ட லட்சணை, விடாத லட்சணை விட்டுவிடாத லட்சணை என மூன்று.

கங்கையில் கிராமம் இருக்கின்றது என்றால் கங்கைக் கரையில் கிராமம் இருக்கின்றது என்று பொருள். இதில் கங்கை என்னும் பதத்தின் வாச்சியமான பிரவாகம் என்பதை முழுவதும் விட்டு விட்டு, கரையை ஏற்றுக்கொள்வதால் இது விட்டலக்கணை.

கருப்பு, சிவப்பு, ஓடுகிறது என்றால் கருநிறம் செந்நிறமுடைய பசு, குதிரை ஓடுகிறது என்று பொருள். இதில் கருப்பு, சிவப்பு என்ற பதங்களின் வாச்சியமான கருநிறம், செந்நிறம் விட்டு விடாது, இன்னும் கிரகித்து, ஏற்றுக்கொள்ளப் படுவதால் விடாதலக்கணை யாகும்.

அந்த தேவதத்தனே இந்ததேவதத்தன் என்றால் முன்பு அடுத்த ஊரில் பார்த்த அவனே இன்று எதிரேபார்க்கும் இவனுகுமென்று பொருள். இதில் காலத்தையும், இடத்தையும்

நீக்கிப்பார்த்தால் ஆள் ஒருவனே யாதலால் அவனே, இவன் என்று சொன்னது பொருந்தும். இது விட்டுவிடாத லக்கணே.

ஜீவ ஈசுவர பேதத்தை நிவர்த்தி செய்யச் சொன்னது போல, ஜீவ ஈஸ்வரர் பேதம் நீங்கப் பிரம்மாத்ம ஏகத்துவம் பொருந்தும்.

ஆகவே விட்டு விடாதலக்கணே மகா வாக்கியத்திற்குப் பொருந்தும்.

204. வினு:— ஞானத்திற்குத் தடை எத்தனே? நிவர்த்தி யாது? உபமானம் யாது?

விடை:— அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் ஆக மூன்றும் ஞானத்திற்குத்தடைகளாம். கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆக மூன்றினுலும் நிவருத்தியாகும்.

உபமானம்:— சிட்டுக்குருவி தர்ப்பை நுனியாற் சமுத்திரத்தை இறைத்துப்பாழாக்கத் தான் கொண்ட முயற்சி போலும் பிரதிபந்தங்கள் அடிக்கடி யுதிப்பதால் மலேயாமல், அவை கெடுதற்குரிய வாயிலில் நெடுங்காலம், நிரந்தரம் ஆதரவோடு கூடி நிற்கும் முயற்சி.

205. வி௲:— ஜீவன் முக்தி, விதேக முக்தி என்பது யாது?

விடை:—ஜீவன்முக்தி யாவது:— தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கத் தான் பிரம சொரூபமாக நிலைத்தல்.

விதேக முத்தியாவது:— ஞாதா, ஞானம் நீங்கி வெளிபோல் ஞேயமாத்திரமாயுள்ள ஜீவன் முத்தர் விதேகமுத்தி பெற்றிருப்பார். தத்துவ விளக்கப்படலம் 86-வது கவி பார்க்க. இது அநுபவம். இன்னும் விதேக முத்தி யென்பது கடம் என்னும் உபாதி நீங்க ககனம் ஒன்றுனாற் போல உடலென்னும் உபாதிநீங்க, பிரபஞ்சம் தோன்றாத நிலை. தத்துவவிளக்கப்படலம் 99 கவி. இது சுருதி.

206. வி௲:— கர்மம் எத்தனை? எதனால் நிவர்த்தி?

விடை:— சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம் ஆக மூன்று.

சஞ்சிதம்:— முன் சென்மத்தில் சேர்த்து வைத்தது. இது பூழித்தீயிற் பஞ்சுபோல் ஞானத்தால் நிவர்த்தியாகும்.

ஆகாமியம்:—இப்பொழுது நாம் செய்வது. இது அடுத்த பிறவிக்குக் காரணம். இது ஞானிக்குத் தாமரையிலைத்தண்ணீர் போல் பற்றறப் பிறவிக்கேதுவாகிய ஆகாமியம் நீங்கும்.

பிராரத்தம்:— அநுபவித்துத் தீரும். தத்துவவிளக்கப்படலம் 103-வது கவி.

ஆவரணசக்தி ஆசிரயத்தில் இருக்கின்றது. இது சஞ்சித கர்மம்.

விட்சேபசக்தி ஆசிரயத்தில் இருக்கின்றது. இது பிரார்த்தகருமம்.

207. வினா:— தாதாத்மியம் எத்தனை? விளக்குக.

விடை:— தாதாத்மியம் மூன்று.

1. பிரமஜதாதாத்மியம். 2. சகஜதாதாத்மியம். 3. கர்மஜதாதாத்மியம் ஆக மூன்று.

1. பிரமஜதாதாத்மியம்:—

அகங்காரத்திற்குச் சாக்ஷியினோடுள்ள தாதாத்மியம்.

2. சகஜதாதாத்மியம்:—

அகங்காரத்திற்குச் சிதாபாசனோடுள்ள தாதாத்மியம்.

3. கர்மஜதாதாத்மியம்:—

அகங்காரத்திற்கு ஸ்தூல தேகத்தோடுள்ள தாதாத்மியம்.

208. வினு:— அப்பியாசி, ஞானி இவர்களுடைய விசார பலம் யாது?

விடை:— அப்பியாசி:— மோக்ஷம் அடையப் பற்றுடன் விசாரணை செய்வான்.

ஞானி:— ஜீவமுக்தி ஆனந்தத்தின் பொருட்டு விளையாட்டாக விசாரணை செய்வான்.

209. வினு:— நிவர்த்தி லட்சணம் யாது?

விடை:— மித்தியாத்வ பொய்யென்னும் நிச்சயமாகிய பாதம் நிவர்த்தி யெனப்படும்.

210. வினு:— நிவர்த்தி எத்தனை வகைப்படும்? விளக்குக.

விடை:— பாதரூப நிவர்த்தி, நாசரூப நிவர்த்தி யென இருவகைப்படும்.

பாதரூப நிவர்த்தி:—

காரண சகித, காரிய லபவடிவ நிவர்த்தி பாதரூப நிவர்த்தி.

(உ-ம்) தப்த படம் போல ஞானிக்கு உலகம் தோன்றும்.

இதுவே அத்தியந்த நிவர்த்தியென்று சொல்லப்படும். இதனையே விஷபவடிவ பாதமென்றும் நித்திய நிவர்த்தத்தின் நிவர்த்தியெனப்படும்.

நாசரூப நிவர்த்தி:—

காரணத்தில் காரிய லயவடிவ நிவர்த்தி.

(உ-ம்) கடம் உடைந்து . மண்ணுதற்போல இதனை விஷபவடிவ பாதமென்றும் கூறுவர்.

211. வினு:—ஞானத்தின் சொரூபம் யாது?

விடை:— ஜீவப் பிரஹ்மங்களின் அபேத நிச்சயம் ஞானத்தின் சொரூபம்.

212. வினு:—மோக்ஷத்தின் லட்சணம்யாது?

விடை:— கர்த்திருத்துவ, போக்திருத்துவ வாதி வேற்றுத் தன்மையை விட்டுத் தனது சொரூபமாக நிலைத்தல் மோக்ஷமாம்.

213. வினு:— மோக்ஷம் எத்தனை? அதில் முக்கியம் எது?

விடை:— மோக்ஷம் ஐந்து. அதாவது சாலோப, சாரூப, சாமீப, சாயுச்சியர், கைவல்லியம் ஆக ஐந்து.

முக்கியம் கைவல்லிய மோக்ஷம்.

214. வினா:— ஞானத்திற்கு நியாயம் எத்தனை?

விடை:— ஞானத்திற்கு நியாயம் இரண்டு. அதாவது மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம்.

மர்க்கட நியாயம்:— குரங்கின் குட்டி தன் தாய்க்குரங்கு எங்கே தாவினும், தான் அதனை விடாது பற்றியிருத்தல்.

மார்ச்சால நியாயம்:—தாய்பூனை தன் குட்டிகளிருக்குமிடத்தைத் தேடித்தானே கௌவி யெடுத்துப்போய்க் காப்பாற்றுதல்.

215. வினா:— பேதம் எத்தனை?

விடை:— ஜீவ ஈசுவர பேதம், ஜீவ பரஸ்பர பேதம், ஜீவ ஜட பேதம், ஈசுவர ஜட பேதம், ஜட ஜட பேதம் ஆக ஐந்து வகைப்படும்.

ஜீவ ஈசுவர பேதம்:—

ஜீவ ஈசுவரர்களின் பேதம் கற்பிதம். அவித்தியா, மாயா, ரூப உபாதிகளாலாயினவை யாயிருத்தலின், கடாகாச மடாகாசங்களின் பேதம் போல் அறிக.

ஜீவ பரஸ்பர பேதம்:—

ஜீவர்களின் பரஸ்பரபேதம் கற்பிதம். ஆபாஸ சகித அந்தக்கரணரூப உபாதியினுலாகியனவாயிருத்தலின், நாநா கடாகாசங்களில் பேதம் போல அறிக.

ஜீவ ஜடங்களின் பேதம்:—

ஜீவ ஜடங்களின் பேதம் கற்பிதம். (ஆபாச) ஸாபாஸ, அந்தக்கரண, நிராபாஸ, நாம, ரூப மய உபாதிகளாலாகியனவாயிருத்தலின் சொப்பனத்திலுள்ள சராசரங்களைப்போல அறிக.

ஈசுவர ஜட பேதம்:—

ஈசுவர ஜடபேதம் கற்பிதம். ஸாபாஸ, மாயை, நாம, ரூபமய உபாதிகளாலாகியனவாயிருத்தலின் சாக்ஷி சொப்பனப் பிரபஞ்சங்களின் பேதத்தைப்போல அறிக.

ஜடஜட பேதம்:—

ஜடஜடங்களின் பேதம் கற்பிதம். நாம, ரூப மய உபாதியினுலாகியனவாயிருத்தலின் இரஜ்ஜுவிற்கற்பித சர்ப்ப தண்டமுதலியவற்றின் பேதம் போல அறிக.

இந்த ஐவகை அநுமானங்களும் பஞ்ச பேதத்தின் கண்டநத்தின் யுக்திகளாம்.

216. வினு:— பிரமாணம் எத்தனை? முக்கியம் எது?

விடை:— 1. பிரத்தியட்சப்பிரமாணம் 2. அநுமானம் 3. உபமானம் 4. சத்தம் 5. அர்த்தாபத்தி 6. அநுபலப்தி என ஆறு வகைப்படும். முக்கியம் சத்தப்பிரமாணம்.

217. வினு:— ஜடமாகிய விருத்தி சித்தாகிய பிரமத்தை எப்படிப் போய் எட்டும்? உபமானம் யாது?

விடை:— மகா வாக்கியத்திற்கும், சத்தப் பிரமாணத்திற்கும், லட்சண விருத்திக்கும், பிரஹ்மம் எட்டும் என்று சுருதி சொல்லப்பட்டிருக்கின்றது.

(உ-ம்) அஞ்ஞானமாகிய கடத்தில் பிரஹ்மமாகிய ரத்தினம் இருக்கிறது. பிரஹ்மாகாரவிருத்தி ஞானமாகிய தடியால் கடத்தை உடைத்தால், பிரஹ்மமாகிய ரத்தினம் தானே பிரகாசிக்கும். இது அநுபவம்.

இந்த விருத்தியும், தீபமானது அந்நியப் பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கிறது போலப் பிரஹ்மத்தைப் பிரகாசிப்பதில் சாமர்த்திய முடையதன்று. ஆனல் கடத்தினல் மூடப்பட்டு இருட்டிலிருக்கும் ஒரு ரத்தினமானது தண்டத்தினல் கடமுடைந்தவுடன் தானே பிரகாசிக்கிறது போல, "அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் விருத்தியினல் பிரஹ்மத்தின் ஆவரணரூப அஞ்ஞானம் நீங்கப் பிரஹ்மம் தானே பிரகாசிக்கின்றது. விருத்தி அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்வதே பிரஹ்மத்தைப் பிரகாசிப்பித்தலெனப் படுகிறது. பிரஹ்மம் தனது பிரகாசத்தில் புத்தி முதலிய வேறுபிரகாசங்களைபபேட்சியாமல் எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பதாயிருத்தலால் அது "புத்தியறியாததாயும், புத்தியை யறிவதாயும்" என்னும் வாக்கியத்தால்சுயம்பிரகாச மென்றுசித்திக்கிறது.

218. வினு:— நிர்விகற்ப சமாதியில் மனம் நிற்க உபாயம் யாது?

விடை:— சத்துவ குணத்தால் சன்மார்க்கம் நிற்க, ரஜோ, தமோகுணங்களை விட்டு நீங்கினல் விட்சேபமாகிய சலனம் நிங்கும். நீங்கத் தெளிந்த

ஆகாயம் போல உள்ளம் நிர்விகற்ப சமாதியில் நிற்கும்.

219. வினு:— மனத்தின் லக்ஷணம் யாது?

விடை:— சர்வமயமாயும், அநித்தியமாயும், ஜடமாயும், அரக்கு, சுவர்ண மெழுகுகள் போல அநேகவித பரிணுமங்களுக்கு யோக்கியத் திரவிய மாயிருப்பதெதுவோ அதுவே மனது.

220 வினு:— வாசனை லக்ஷணம் யாது?

விடை:— திடபாவனையால் முன்பின்னுென்றையுமாலோசியாமலுண்டாகும் குரோதாதி விருத்திக்கேதுவான சித்தத்தின் சூட்சுமாவஸ்தை யாகிய சமஸ்காரம்.

221 வினு:— மானிடர் செய்யும் தொழில்கள் எத்தனை?

விடை:— கர்மி, பக்தன், உழவாதி, யக்ஞாதிகளைச் செய்பவன்.
முமூட்சு—சிரவணுதிகளைச் செய்பவன்.

222 வினு:— அஞ்ஞானிபோல் ஞானியும் தொழில் செய்கிருன்? அதற்கு உபமானம் யாது?

விடை:-அஞ்ஞானிபோல ஞானியும் தொழில் செய்தாலும், அஞ்ஞானி தேகாதிப் பிரபஞ்சம் உண்மையென நம்பித் தொழில் செய்கிறுன்.

ஆனுல் ஞானியோ சொப்பனம்போல வாசனையால் செய்தாலும், உள்ளபடி தான் கர்த்தாவாயிருந்து செய்வதில்லை.

உபமானம்:—அரசனுயுள்ளோன் நித்திரா மோகத்தாற் சொப்பனத்தில் பிச்சையேற்பவனுகத் தன்னைக்கண்டு, விழித்தபின் அம்மோகம் நீங்கி அரசனுயிருந்துகொண்டு முன்னே சொப்பனத்திற்கண்ட வாசனையால் தன்னைப் பிட்சகனுகச் சொல்லினும், உண்மையாகத் தான் பிட்சகனென்பது அவனுக்குள்ளே இல்லாமைபோல, ஞானியும் பூர்வவாசனையால் சிதாபாசனுகத் தன்னை வியவகரித்துச் சொல்லினும், அவனுள்ளே அகங்காரக் கிரந்தியின்மையில் அவன் சிதாபாசனல்லன்.

223. வினு:—அஷ்டாங்கமாவது யாது?

விடை:—1. இயமம். 2. நியமம். 3, ஆசனம், 4. பிராணுயாமம், 5. பிரத்தியா

காரம், 6. தாரணை, 7. தியானம், 8. சவிகர்ப்ப சமாதி, ஆக எட்டும் அஷ்டாங்கமாம்.

224. வினு:—அஷ்டாங்கங்கள் வேறுவிதமாக எங்கேனும் சொல்லப்பட்டிருக்கிறதா?

விடை:—திருசிகியுபநிஷத்தில் தேகேந்திரியங்களிலுண்டாகும் வைராகம் இயமமென்றும், பரதத்துவத்திலிடைவிடாதுண்டாகும் விருப்பம் நியமமென்றும், சகல வஸ்துக்களினிடத்திலும் உதாசீனமாக இருத்தல் ஆசனமென்றும், சகல சகத்தும் மித்தையாகத் தோற்றுதல் பிராணயாமமென்றும், சித்தத்தின் அந்தர் முகத்தன்மை பிரத்தியாகாரமென்றும், சித்தத்தின் நிச்சலத்தன்மை தாரணையென்றும், அந்தச் சின்மாத்திரமே நானென்று சிந்தித்தல் தியானமென்றும், தியானத்தையும் நன்ருய் மறத்தல் சமாதியென்றும் சொல்லப்படுகிறதெென அறிக.

225. வினு:—சமாதிலக்ஷணம் யாது? எத்தனை வகைப்படும்?

விடை:—வியுத்தான சம்ஸ்காரத்தினெழிவும், நிரோத சம்ஸ்காரத்தின் பிரகடத்தன்மையுமாகிய அந்தக்கரணத்தின் ஏகாக்கிரகத்தன்மை ரூபமான பரிணமஞ் சமாதி யெனப்படும்.

அச்சமாதியும் சவிகற்பசமாதி, நிருவிகற்ப சமாதியென இருவகைத்தாம்.

ஞாதா ஞான ஞேய ரூபத்திரிபுடித் தோற்றத் தோடுகூட அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் அந்தக்கரண விருத்தியின் ஸ்திதி சவிகற்ப சமாதியெனப்படும்.

அதுவும் சத்தாநுவித்தம், சத்தாநநுவித்தம் என இருவகைத்தாம். அவற்றுள் அகம்பிரஹ்மம் என்னும் சத்தத்தோடுகூடியிருப்பதைச் சத்தாநநுவித்தம் எனவும், சத்த ரகிதத்தைச் சத்தாநுவித்தமெனவுங் கூறுவர். திரிபுடித் தோற்றமின்றி அகண்ட பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் ஸ்திதியை நிருவிகற்ப சமாதி யென்பர்.

இவ்வாறு சவிகற்பசமாதி, நிருவிகற்பசமாதிகட்கும் பேதமுண்டு. அவைகளில் சவிகற்ப சமாதி சாதனம், நிருவிகற்ப சமாதி பலமாம்.

நிருவிற்கப சமாதியும் அத்வைத பாவனாரூபமென்றும், அத்வைதாவஸ்தாநரூபமென்றும் இருவகைத்தாம்.

அத்வைதப் பிரஹ்மாகாரமான அந்தக் கரணத்தின் அஞ்ஞாதவிருத்தியோடுகூடில் அது அத்வைதபாவனுரூப நிருவிகற்பசமாதி யெனப்படும். அச்சமாதியின் அப்பியாசமிகுதியால் பிரஹ்மாகார விருத்தியுஞ் சாந்தமாய்விடில் விருத்தி ரகிதமான அச்சமாதி அத்வைதாவஸ்தாநரூப நிருவிகற்பசமாதி யெனப்படும்.

அத்வைத அவஸ்தாநரூப நிருவிகற்ப சமாதியே முக்கிய பலமாம்.

அத்வைத பாவனுரூப நிருவிகற்ப சமாதி அதற்குச் சாதனமாம்.

226. விஞ:—சமாதிக்கு விக்கினம் (பிரதிபந்தங்கள்) எத்தனை?

விடை:—(1) லயம். (2) விட்சேபம். (3) கசாயம். (4) ரசாஸ்வாதம் என நான்கு வகைத்தாம்.

227. விஞ:—நான்கு பிரதிபந்தங்களுள் லயமாவது யாது?

விடை:—தியான நிமித்தம் விடயங்களினின்றுந் திருப்பப்பட்ட அந்தக்கரணவிருத்தி அகண்ட வஸ்துவை யவலம்பிக்காமல் நித்திரை

யாலஸ்யாதிகளால் தன் உபாத்ானகாரணமாகிய அந்தக்கரணத்திற் சங்கோசமர்கிச் சுழுத்திய வஸ்தைக்குச் சமானுவத்தையை யுறுவதென அறிக.

228. வினு:—இதனை எதனுல் நிவிர்த்தி செய்யலாம்?

விடை:— லயத்துக்குக் காரணமாகிய நித்திராசேட ஆலஸ்யாதிகளை நிரோதஞ் செய்து விருத்தியை யெழுப்புவதாகிய சித்தசம்போதனத்தாலென அறிக.

229. வினு:—விக்ஷேபம் யாது?

விடை:—பூனையாதிகளுக்கஞ்சி வீட்டினுள் பிரவேசித்த சிட்டுக்குருவி பயவியாகூலத்தால் வீட்டினுள்ளிருத்தற்குத் தக்க இடம் இன்ன இடமென்றறியாமல் பின்னரும் வெளிப்பட்டுப் பயம் அல்லது மரணரூப துக்கங்களை யடைவது போல அனுத்ம ஏதுக்களை துக்க ஏதுக்களாக அறிந்து அத்வைதானந்தத்தை விஷயமாக்கும் நிமித்தம் அந்தர் முகமாகிய விருத்தியானது தினந்தோறும் பழகிய சாக்கிர சம்ஸ்காரபலத்தால் அற்பகாலமேனும் ஏகாக்கிரமாயிருத்தற்குக்

கூடாமையினானும், சேதனரூபம் அதிசூட்சும மானமையினாலும், அச்சொரூபத்தை யவலம் பித்துப் பிரஹ்மானந்தத்தை யனுபவியாமல் விடயங்களேயும் கருதிப் பகிர்முகமாகச் சலிக்கு தலென அறிக.

230. வினா:—கஷாயமாவது யாது?

விடை:—மனதை லயவிக்ஷேபங்களிற் செல்ல விடாமல் நிரோதித்துத் தியானம் செய்து கொண்டு வரும்போது பாஹியாந்தரமென்னு மிருவகையாயுள்ள தீவிர ராகத்துவேஷாதிகளால் துக்கங்களில் மூழ்கிச் சமாதியிலிருப்பதுபோல ஏகாக்கிரமாயிருப்பது என அறிக.

231. வினா:—ரசாஸ்வாதம் (சுகானுபவம்) யாது?

விடை:—லய, விக்ஷேப, கஷாயங்களின்றிச் செய்யுந் தியானவலியால் அடையத்தக்க சவிகற்ப சமாதியிலுதயமாகின்ற ஆனந்தானுபவம் அல்லது விக்ஷேபதுக்க நிவர்த்தியாலுதயமாகிய ஆனந்தானுபவமென அறிக.

232. வினா:—ஞானிகள் தியானம் செய்கிறார்கள். எதற்காக?

விடை:—உலகுக்கு உபகாரமாகவும், பிரா ரத்தமாகவும், ஞானிகள் தியானம் செய்கிருர்கள்.

233. வினு:—சில ஞானிகள் முக்தியும், ஞானிகளில் சிலர் சித்தியும் முத்தியும் அடைந்தார்கள். அதற்கு காரணம் என்ன?

விடை:—ஞானிகளில் சிலர் காமியத்தவம், நிஷ்காமியத்தவம் இரண்டும் செய்து அவரவர் பிரார்த்தித்தபடி சித்தியும், முக்தியுமடைந்தார்கள். ஞானிகளில் சிலர் நிஷ்காமியத்தவம் செய்து முத்தியே யடைந்தார்கள்.

234. வினு:—தவம் எத்தனை?

விடை:—மோக்ஷம் அடைய விருப்பமுள்ளவர்கள் விசாரிக்கவேண்டிய தவம் இரண்டு. 1. காமியத்தவம் 2. நிஷ்காமியத்தவம். காமியத்தவமானது, உலகப்பொருளில் பற்றுடன் செய்வது.

நிஷ்காமியத்தவம் உலகப்பொருளில் பற்று நீக்கிச் செய்வது.

235. வினு:—அம்ஸம் எத்தனை?

விடை:—(1) சாமான்ய அம்சம் (2) விசேஷ அம்சம் (3) கற்பித விசேஷ அம்சம் ஆக மூன்று. சாமான்ய அம்ஸ லக்ஷணம்:—

எது பிராந்தி காலத்திலும், பிராந்தியின் நிவர்த்திகாலத்திலும் தோற்றுகின்றதோ அதனை சாமான்ய அம்ஸமென்பர். இதனையே ஆதார மென்றும் கூறுவர்.

விசேஷ அம்ஸம்:—

எது பிராந்திகாலத்தில் தோன்றுகிறதில்லையோ (எதன் தோற்றத்தால்) பிராந்தி நீங்குகின்றதோ அதனை விசேஷ அம்ஸமென்பர்.

அதனையே அதிஷ்டானமென்றும் கூறுவர்.

கற்பித விசேஷ அம்ஸ லக்ஷணம்:—

எது அஞ்ஞான காலத்தில் தோற்றுகின்றதோ, ஞானகாலத்தில் தோற்றுகிறதில்லையோ அதனை கற்பித விசேஷ அம்ஸமென்பர். அதனையே அத்தியஸ்தமென்றுங் கூறுவர்.

236. வினா:—பஞ்சப்பிராந்தி யாது?

விடை:—(1) பேதப் பிராந்தி. (2) கர்த்திருத்துவபோக்திருத்துவப் பிராந்தி (3) சங்கப்

பிராந்தி (4) விகாரப்பிராந்தி (5) பிரஹ்மத் திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தியென ஐவகைப்படும்.

237. வினு:—ஐவகைப் பிராந்தியும் எதனுல் நிவிர்த்தியாகும்? உபமானம் யாது?

விடை:—(1) பிம்பப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப் பிராந்தியும், (2) ஸ்படிகத்தில் சிவப்பு வஸ்திரத்தின் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியும், (3) கடாகாசத் திருஷ்டாந்தத்தால் சங்கப் பிராந்தியும் (4) இரஜ்ஜுவில் கற்பிதமாகிய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப் பிராந்தியும், (5) கனகத்தில் குண்டலம் தோற்றம் திருஷ்டாந்தத்தால் பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தியும் நிவர்த்தியாகும்.

இன்னும் பிராந்தி இருவகைப்படும் உபாதியோடு கூடிய சோபாதிக பிராந்தி, இத்தன்மையது கண்ணுடியில் பிரதிபிம்பம், ஜகத்து முதலியவற்றினதாம்.

நிருபாதிகப்பிராந்தி:—

கேவல அஞ்ஞானத்திற்றோன்றுவது இத்தன்மையது இரஜ்ஜுவிற்றோன்றும் சர்ப்ப முதலியவற்றினதாம்.

238. வினா:— பட்சம் எத்தனை? எதற்குச் சொன்னது? உபமானம் யாது?

விடை:— பூர்வ பட்சம், சித்தாந்த பட்சம் என இருவகைத்தாம்.

கர்மகாண்டத்திற்கும், பக்திகாண்டத்திற்கும் பூர்வபட்சமெனப்படும்.

(உ-ம்) பூ, காய், பழம் போல.

ஞான காண்டம் சித்தாந்தபட்சம்.

(உ-ம்) வேதாந்த முடிவு.

239. வினா:— காண்டம் எத்தனை? அதனால் நிவர்த்தி யாது?

விடை:— (1) கர்மகாண்டம் (2) பக்தி காண்டம் (3) ஞான காண்டம் என மூவகைத்தாம். கர்மகாண்டத்தால் மல தோஷமும், பக்தி காண்டத்தால் விட்சேப தோஷமும், ஞான காண்டத்தால் ஆவரண தோஷமும் நிவர்த்தி யாகும்.

240. வினு:— புத்தி ரூப விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகள் இருக்கின்றன. அவைகளில் கருமபலனை எது புசிக்கும், எது புசியாது?

விடை:— கூடஸ்த பிரம்ம சாக்ஷிப்பக்ஷி புசியாது. அவித்தையிற் பிரதிவிம்பித்த ஆபா சப்பட்சி புசிக்கும்.

ஆகையால் புத்தி ரூப விருக்ஷத்தில் பரமாத் மா, ஜீவன் என்று இரண்டு பக்ஷிகளிருக்கின்றன என்பதாக வைத்துக்கொண்டால் அதற்குப் பர மாத்மாவையும் ஜீவனையும் கொள்ளலாகாது. ஆனுல் கூடஸ்தன் பிரகாசித்துக் கொண்டிருக் கிறுர், ஆபாசன் புசிக்கிறுன் என்று உத்தரம் சொல்லப்பட்டது.

241. வினு:— சொரூப ஞானம், விருத்தி ஞானம் என்றுல் என்ன? உபமானம் யாது? எந்த ஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த்தியாகும்?

விடை:— கட்டையில் தீ மறைந்திருத்தல் போன்று சொரூப ஞானமும் அடங்கியிருப்ப தாகும். கட்டையைக் கடைந்தால் தீ வெளிப் படுவது போன்று விருத்தி ஞானமும் வெளிப் பட்டு நிற்பதாம்.

(உ-ம்) சொரூப ஞானம் அஞ்ஞானத்தைக் கெடுக்காது. சுழுத்தியில் சொரூபஞானமும் அஞ்ஞானமும் பொருந்தியிருந்தாலும் அஞ்ஞானம் கெடுகிறதில்லை. விருத்தி ஞானம் தான் அஞ்ஞானத்தைக் கெடுக்கும்.

(உ-ம்) கட்டையில் தீ (அடங்கியிருப்பினும்) அத் தீ அகங்காரத்தை அழிக்காதது போன்று யாவரிடத்தும் சொரூபஞானம் அடங்கியிருந்தாலும் அச்சொரூபஞானம் அஞ்ஞானத்தை அழிக்காது.

கட்டையைக் கடைவதால் வெளிப்படும் தீயே அந்தகாரத்தை அழிப்பது போல, வேதாந்தவிசாரத்தினுல் உண்டாகும் விருத்தி ஞானமே அஞ்ஞானத்தை அழிப்பதாகும்.

கைவல்ய நவநீதம், சந்தேகந் தெளிதல் படலம் 78, 79 கவியைப் பார்க்க.

242. வினு:— திரிபுடியாவது யாது?

விடை:— (1) பிரமாதா (2) பிரமாணம் (3) பிரமேயம் ஆக மூன்று.

243. வினு:— தியானத்திற்கும், ஞானத்திற்கு முள்ள பேதம் யாது?

விடை:— தியானமாவது:— விதி, இச்சை, விசுவாசம், ஹடம் என்னும் நான்கின் அதீனம் அதாவது நான்கின் வசம்.

ஞானமென்பது, பிரமாண பிரமேயங்களின் அதீனம்.

244. வினா:— பிரமாகார விருத்தி எப்போது நிவர்த்தியாகும்?

விடை:— ஜாடியிலுள்ள கலங்கிய நீரின், மண்ணைப் பிரித்த தேற்றாம்பொடி, அம் மண்ணோடு மாய்வது போல்; ஞானமும் அஞ்ஞானத்தைக் கெடுத்துப் பின் அவ்வஞ்ஞானத்தோடு கூடவே நாசமுறும்.

அதாவது நான் பிரஹ்மம் என்பதை மறந்த நிலை அல்லது சகஜநிஷ்டை.

245. வினா:— பதினென் புராணம் யாது?

விடை;— (1) பிரஹ்மம் (2) பதுமம் (3) விஷ்ணு (4) சைவம் (5) பாகவதம் (6) நாரதீயம் (7) மார்க்கண்டேயம் (8) ஆக்நேயம் (9) பௌஷ்யம் (10) பிரஹ்மகைவர்த்தம் (11) இலிங்கம் (12) வராகம் (13) ஸ்காந்தம் (14) வாமனம் (15) கூர்மம் (16) மச்சியம் (17)

காருடம் (18) பிரஹ்மாண்டம் ஆக புராணம் பதினெட்டு.

246. வினு:— வேதாங்கம் எத்தனை? அவை என்ன?

விடை:— வேதத்திற்குப் பாதம், அஸ்தம், முகம், கிராணம், நேத்திரம், சுரோத்திர மென்னும் முறையால் சந்தசு, கற்பம், வியாகரணம், சிக்ஷை, சோதிஷம், நிருத்தியென்னும் ஆறு அங்கங்களாம்.

அவற்றுள்:—

சந்தசு:— மந்திர சுலோகாதிகளுக்கு அக்ஷரகணிதஞ் செய்வது.

கற்பம்:—ஆசுவலாயன, போதாயன, ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில் யக்கியப் பிரயோகாதிகளைக் கற்பிப்பது.

வியாகரணம்:—வைதிக சாஸ்திரார்த்த சித்தியைச் சமர்ப்பிப்பது.

சிக்ஷை:— உதாத்த, அனுதாத்த, ஸ்வரித, பிரசயமென்னும் சதுர்வித ஸ்வர கரண பூர்வகமான பதபாளிக்கிரம வேதாத்தியாயனுதிகளைச் சொல்வது.

சோதிஷம்:— லக்கின, திதி, வார, நக்ஷத்திர, யோக, கரணாதிகளால் வைதிக கர்மங்களுக்குக் காலந் தெரிவிப்பது.

நிருத்தி:— வைதிக சப்த நிர்வசனத்தை நியமிப்பது.

246.–(அ) வினா:— மாயை நிவருத்திக்கு மந்திரம் என்ன?

விடை:—வாயுத்தம்பனம், ஜலத்தம்பனத்தால் சக்தியடங்குவது போல நீ அச்சச்சிதாநந்தமாயிருந்தால் மாயாசக்தி போகும். சந்தேகந்தெளிதல் படலம். (கவி 102)

247. வினா:— ஆத்மாவின் லக்ஷணம் யாது?

விடை:—ஸ்தூல, சூக்ஷம, காரணசரீரங்களுக்கு வேறாய், பஞ்சகோசங்களுக்கு அப்பாற்பட்டதாய், மூன்றவஸ்தைக்குச் சாட்சியாயிருப்பது எதுவோ அது ஆத்மாவாம்.

248. வினா;— சத், சித், ஆனந்த லக்ஷணம் யாது?

விடை:—சகல பதார்த்தங்களிலும் அஸ்தி,

பாதி, பிரியம், நாமம், ரூபம் என்னும் ஐந்து அம்சங்களுண்டு.

குடமிருக்கிறது என்பது அஸ்தி (சத்)

குடம் விளங்குகிறது என்பது பாதி (சித்)

குடம் பிரியமாயிருக்கிறது. ஏனெனில் குடம் நீர் மொள்ளுவதற்கு உபயோக முள்ளதாயிருத்தலால் பிரியம். (ஆனந்தமாம்)

குடம் என்னும் மூன்று எழுத்து. (நாமம்)

குடம் பருத்த உருண்ட வயிறுடைமை குடத்தின் ரூபம். (ரூபம்)

இவ்வாறு வெளிப்பதார்த்தங்களில் ஐந்து அம்சங்கள் காட்டப்பட்டன.

ஆந்திர (உள்) தேக முதலியவற்றில்; நான் இருக்கிறேன் என்பது அஸ்தி. (சத்)

நான் அறிகிறேன் என்பது பாதி (சித்)

எனக்கு நானே பிரியனாயிருக்கிறேன். என்பது பிரியம். (ஆனந்தம்)

தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், அஞ்ஞானம், இவற்றின் தர்மம் என்பது (நாமம்)

இவற்றிற்குரிய வடிவம் (ரூபம்)

இது ஆந்திர (உள்) பதார்த்தங்களில் ஐந்து அம்சம் காட்டியதாம்.

நானே அந்த அஸ்தி, பாதி, பிரிய, சாமானிய சைதன்னிய மாகிய பிரஹ்மம். நாம, ரூப, பிரபஞ்சம் என்னிடத்திற் கற்பிதம் என்று நிச்சயம் செய்ய வேண்டியது.

249. வினு:— இப்படி நிச்சயம் செய்வதால் என்ன உண்டாகும்?

விடை:— இப்படி நிச்சயம் செய்வதால் அனர்த்த நிவர்த்தியும், பரமானந்தப் பிராப்தியுமாகிய மோக்ஷம் உண்டாகும்.

250. வினு:— பிரஹ்மம் சித்திலக்கணமுடையதென்றது எதனுல்?

விடை:— சூரியன், தீபாதி சாதனுந்தரங்களை யபேக்ஷியாமல் தானும் பிரகாசமாயிருந்து கொண்டு தன்னையடுத்த கடபடாதி வஸ்துக்களையும் விளங்கச் செய்வது போலப் பிரஹ்மம், சூரியாதி அஷ்டப் பிரகாசங்களையும் அபேக்ஷியாமல் தான் சுயம் பிரகாசமாயிருந்து கொண்டு தன்னை

யடுத்திராநின்ற அவஸ்தாத்திரயப் பிரபஞ்சங் களனைத்தையும் விளங்கச் செய்யும் ஆற்றலுடைய அறிவாய் விளங்குதலினென அறிக.

251. **வினா:**—சூரியாதி அஷ்டப் பிரகாசங் களெவை?

**விடை:**— சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்கினி, மின்னல், சீவன், புத்தி, இந்திரியங்க ளென அறிக.

252. **வினா:**— இவைகளில் பாஹியப் பிர காசங்களெவை? ஆந்திரப் பிரகாசங்களெவை?

**விடை:**—முறையே முன்னர்க் கூறிய ஐந்தும் பாஹியப் பிரகாசங்கள், பின்னர்க் கூறிய மூன் றும் ஆந்தரப்பிரகாசங்களென அறிக.

253. **வினா:**— எட்டுவகை ஆனந்தங்கள் எவை?

**விடை:**— விடயாநந்தம், பிரஹ்மானந்தம், வாசனாநந்தம், முக்கியாநந்தம், நிஜாநந்தம், ஆத் மாநந்தம், அத்வைதாநந்தம், வித்யாநந்தமென் பவைகளாம்.

254. **வினா:**— எட்டுவகை ஆனந்தத்தில் முக்கியம் எத்தனை?

விடை:—மூன்று முக்கியம். ஆத்மாநந்தம், அத்வைதாநந்தம், வித்தியாநந்தம் என மூன்றும்.

255. வினா:— பிரஹ்மத்திற்குச் சொரூப லக்ஷணம் என்ன? அதற்கு உபமானம் என்ன?

விடை:—பிரஹ்மத்தின் சொரூபம் சச்சிதாநந்தமாகும். (உ-ம்) முக்காலமும் கெடாததாகையால் சத்தாகும். அறிவு, சொரூபமாய் விளங்கிக்கொண்டிருப்பதால் சித்தாகும். இன்பவடிவாயிருத்தலால் ஆனந்தமாம். (உ-ம்) அசத்து, ஜடம், துக்கம் ஆகிய உலகினின்று வேறு பிரித்துக்காட்டபிரஹ்மத்திற்குச் சொரூபம் சொல்லப்பட்டது. குளிர்ச்சி, நெகிழ்ச்சி, வெண்மை ஆகிய முக்குணங்களை நீர் உடையதாயினும் நீர் ஒரே பொருளே. அதுபோல் பிரஹ்மம் சத் சித் ஆனந்தம் என்ற மூன்றும் வேறு குணங்களையுடையதாயினும் பிரஹ்மம் ஒன்றே. சந்தேகந் தெளிதல். கவி. 135.

256. வினா:— ஜீவன் முக்தர்கள் எத்தனை வகைப்படுவர்?

விடை:—(1) பிரஹ்மவித்து, (2) வரன்,

(3) வரியான், (4) வரிட்டன் என நான்கு வகைப் படுவர்.

257. வினு:—இவர்களில் பிரஹ்மவித்துக்கள் யாவர்?

பிரஹ்ம சாக்ஷாத்கார ஞான மடைந்தவர்களாயும், ஞானப் பேற்றிற்குப் பூர்வமிருந்த தங்கள் வருணாச்சிரமங்கட்கேற்கக் கன்மாதிகளை உலகோபகாரநிமித்தம் மந்திரலோபம், கிரியாலோபம், திரவியலோபமின்றிச் செய்பவர்களாயும், பிராரப்தகன்ம பேதங்கட்குத் தக்கதாகத் தவம், வாணிபம், இராசாங்கம், யுத்தம், ஐயமேற்றுண்ணலாகிய வியவகாரங்களைப் பற்றின்றி மிகுதி அல்லது குறைவாகச் செய்பவர்களாயும், பிரவிர்த்தி நிவர்த்திகளில் நியமமில்லாதவர்களாயும், போகானுபவ காலத்தில் போக வஸ்துக்களைச் சொப்பன வஸ்துக்கள் போல மித்தையாகப் பார்ப்பவர்களாயும், விருத்தி சொரூபாகாரமாகும்போது க்ஷணே க்ஷணே நிருவிகற்ப சமாதியையுடையவர்களாயும், ஞான பூமிகளில் மூன்று பூமிகட்கு மேற்பட்ட நான்காம் பூமியையுடைவர்களாயு மிருப்பவர்களென அறிக.

258. வினு:— பிரஹ்மவித்துவரர்கள் யாவர்?

விடை:—பிரஹ்மஞானனந்தம், தேகலோக சாஸ்திர வாசனைகளைச் சின்மாத்திர வாசனுப் பியாச பலத்தாற் கெடுத்துச் சீவன் முக்திச் சுகத்தை யனுபவிப்பவர்களாயும், சுழுத்தியிற் போல சாக்கிரப்பிரபஞ்சத் தோற்ற மில்லாதவர் களாயும் சுழுத்தியிற் சகலவிருத்திகளும் நித்திரா சக்தியிலடங்கி யிருப்பனபோல சாக்கிரத்தில் சகல விருத்திகளும் ஆத்ம சொரூபமாகிய தன் னில் நிருவிகற்பமாய்ச் சாந்தப் பட்டிருப்பனவாக வுள்ளவர்களாயும், சாக்கிரத்திலிந்திரியங்களிருக் கினும் அவைகளால் விஷயக்கிரகணஞ் செய்யாத சுழுத்தியவஸ்தர்களாயும், ஓரோர் காலத்தில் உபதேச நிமித்தம் அல்லது தேகதாரணத்துக் கின்றியமையாத பிக்ஷையாதிகளேற்றற்கான சஞ்சார நிமித்தம் தாஞக வெளிப்படுபவர்களா யும் ஞான பூமியில் ஐந்தாம் பூமியையுடையவர் களாயு மிருப்பவர்களென அறிக.

259. வினு— பிரஹ்ம வித்து வரியர்கள் யாவர்?

**விடை:**—வாசனுக்ஷய, மனோநாச சம்பன்னர் களாயும், சாக்கிரப் பிரபஞ்சத்தைக் காடசுழுத் திக்குச் சமமாகவுடையவர்களாயும், காடசுழுத் தியன் தானே வெளிப்படாமல் அன்னியர் பிரயத்தனத்தால் வெளிப்படுவதுபோல சதா பிரஹ்மத்திலுபசாந்தமாகிய நிருவிகற்பசமாதியர் களாய்தாங்களே வெளிப்படாமல் சீடராதிய அன் னியர் பிரயத்தனத்தால் ஓரோர் காலத்து வெளிப் படுவர்களாயும் ஞான பூமியில் ஆறும் பூமியை யுடையவர்களாயு மிருப்பவர்களௌன அறிக.

260. **வி:**—பிரஹ்ம வித்துவரிட்டர்கள் யாவர்?

**விடை**—பிரஹ்மாத்மைக்கிய ஞானனந்தம். மனதும் வாசனையும் அத்தியந்தம் நாசமாயினவர் களாயும், அகண்டேகரசப் பிரஹ்மத்திற் கலந்து தொய்தப்பிரதீதியின்றிப் பிரஹ்மமாகவே சேடித் திருப்பதாகிய நிருவிகற்ப சமாதியர்களாயும், தங்களாலும், அன்னியர் பிரயத்தனங்களாலும், ஓர் காலத்தினும் வெளிப்படாதவர்களாயும் சலத் தாற் பூரிக்கப்பட்டு சலத்துள் வைக்கப்பட்ட பூரணகும்பத்துக்கு உள்ளினும், வெளியினும்

சலமே வியாபித்திருப்பது போல பிரஹ்மத்தால் உள்ளினும், வெளியினும் வியாபிக்கப்பட்டுப் பிரஹ்மமாகவே யிருப்பவர்களாயும், ஞானபூமிகளிற் மேலான ஏழாம் பூமியையுடையவர்களாயிருப்பவர்களென அறிக.

261. வினு:— ஞானபூமிகள் எத்தனை?

விடை:—சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமாகிய ஏழு மென அறிக.

262. வினு:— சுபேச்சை என்னும் முதற் பூமி யாது?

விடை:— (பூமியென்பது) சித்தத்தின் அவஸ்தாவிசேடங்களின் நாமம். (சுபமென்பது) பிரஹ்மஞான பலமாகியமோக்ஷம். (இச்சையென்பது) விருப்பம். அதாவது சர்வகன்ம ரகித விவேக வைராக சமாதிசட்க சம்பத்திகளாகிய மூன்று சாதனங்களின் பலத்தால் அதிகாரிகள் சித்தத்தில் துர்ச்சங்கத்தைக்கூடி அளவில்லாத காலம் மூடமாயிருந்து விட்டோம். இனித் தாமதிக்காமல் எவ்விதத்தேனும் துர்ச்சங்த்தைத்

துறந்து சற்குருவை யடைந்து அவராலும், சற்சாஸ்திரங்களாலும், மோக்ஷத்தையடையக் கடவோமெனத் தீவிரமாக வுதயமாகின்ற இச்சையென அறிக.

263. வி௲:—விசாரணை யென்னும் இரண்டாம் பூமி யாது?

விடை:— சர்வ கர்ம சந்நியாச பாலன சாதன சதுட்டய சகிதமாய்க் குருமுகமாகச் சிரவணஞ் செய்து, அவ்வாக்கியார்த்தங்களைச் சத்துக்களாசாரப்படி சுருதிகளுக்கு விரோதமின்றிய தருக்கயுக்தி அநுமானாதிகளோடு மனதிற் பதிவுறும் பொருட்டு மனனஞ் செய்தலென அறிக.

264. வி௲:—தநுமானசி யென்னும் மூன்றும் பூமி யாது?

விடை:—(தநுவென்பது) சுருங்கல். சுருங்குதலாகிய தன்மையை மனதடைகுதல் தநுமானசியாம். அதாவது சுபேச்சை, விசாரணை யென்னுமுபயபூமிகளின் சகாயத்தால் மனது அநேகார்த்த கிரணங்களை விடுத்து ஏகார்த்தமாகிய சத்தே அகமெனும் பிரஹ்மாகார விருத்திப் பிரவாகமாக

நிரந்தரம் தியானிப்பதாகிய நிதித்தியாசனத்தால் மலின வாசனைகளொழிந்து சவிகற்பசமாதியை யுற்று, சூட்சுமத்தன்மையை யடைகுதலாம்.

265. வினு:— சத்துவாபத்தி யாகிய நான்காம் பூமியாது?

விடை:—மனது பரமார்த்த சத்துரூபமாகச் சேடித்திருப்பது சத்துவாபத்தி. அது பூமி காத்திரயாப்பியாச வலியால் மனது சாக்கிரப் பிரபஞ்சங்களனைத்தும் சொப்பனப் பிரபஞ்ச துல்லியமாகவும், சர்வாதிட்டான, சத்து ரூபப் பிரஹ்மமே தானுகவும், அறிந்து சாக்ஷாத்கரித்து க்ஷணே க்ஷணே பிரஹ்மத்தில் க்ஷீரோதிகம் போற் கலந்து திரிபுடி ரகிதமாய் நிருவிகற்ப சமாதியையுறுவதாகிய ஸ்திதியென அறிக.

266. வினு:—அசம் சத்தியாகிய ஐந்தாம் பூமி யாது?

விடை:— சம்சத்தி யென்பது விடயசம்பந்தம், அஃதில்லாமை அசம்சத்தியாம். அஃது சத்துவாபத்தியென்னும் நாலாம் பூமியினுதயமாகிய பிரஹ்ம சாக்ஷாத்கார வலியால் சொப்பன துல்லியமாகக் கண்ட பிரபஞ்சங்களையும்

அறிவு மாத்திரமாகக் கண்டு சுழுத்தியன் போலப் பாஹியாந்தரவாகாரங்களோடும், அவைகளின் சம்ஸ்காரங்களோடுஞ் சம்பந்தமின்றி நித்தியாப ரோக்ஷப் பிரஹ்மத்தில் நிருவிகற்பமாயழுந்தி யிருப்பதென அறிக.

267. விஞ:— பதார்த்தாபாவனை யாகிய ஆரும் பூமி யாது?

**விடை:**— பாஹியாந்தர பதார்த்தங்களின் அபாவப் பிரதீதியே பதார்த்தாபாவனையாகும். அஃது அசம் சத்தியென்னும் ஐந்தாம் பூமியின் வலியால் பிறராலேவுதலின்றிக் காரியப் பிரவிருத்தியின்றிய காட சுழுத்தியன் போற் திட நிருவிகற்ப சமாதியிற் பாஹியாந்தரத்திரிபுடிகள் அபாவமாகி யத்துவிதானந்த மயமாக நிற்குத லென அறிக.

268. விஞ:— துரியமென்னும் எழாம் பூமி யாது?

**விடை:**—சாக்கிராதி மூன்றவத்தைக்கு மப்பாற்பட்ட நான்காமவத்தை துரியமாம். அது பதார்த்தாபாவனை யென்னும் ஆரும் பூமியின் வலியால் திரிபுடித் தோற்றமான நான்காம் பூமி,

ஐந்தாம் பூமிகளிற் போலபாவரூபப் பிரதீதியும் ஆறும் பூமியிற் போல அபாவரூபப் பிரதீதியும் தன்னாலாவது பிறராலாவது பஹிர்முகமாதலு மின்றி அதீதானந்தமயமாகி ஆகாயத்திலுள்ள வெறுங் குடம் போலுள்ளினும், வெளியினுஞ், சூனியமாய் வஸ்து நிலையெப்படியோ அப்படி யிருப்பதென அறிக.

269. வினு:—ஞான பூமிகள் ஏழும் எதற் குச் சாதனம்?

விடை:— ஒன்று, இரண்டு, மூன்ருவது பூமிகள் தத்துவ ஞானத்திற்குச் சாதனம்.

நான்காவது பூமி தத்துவஞான வடிவமா யிருத்தலால் ஜீவன் முக்தி, விதேகமுக்தி களுக்குச் சாதனம்.

ஐந்து, ஆறு, ஏழாம் பூமிகள் ஜீவன் முக்தி யின் விலட்சணனந்தத்திற்குச் சாதனமாம்.

270. வினு:— ஜீவன் முக்தரிடம் என்ன விருத்தியிருக்கும்?

விடை:— ஜீவன் முக்தரிடம் பாதிதாநு விருத்தியிருக்கும்.

(உ-ம்) குலாலன் சக்கரம் சுற்றிவிட்ட பிறகு வேகத்தின் வலியால் சுற்றுதல் போல.

271. வினு;— ஞானிகளிடம் எத்தனை குணம் இருக்கிறது?

விடை:— (1) மைத்திரி (2) கருணை (3) முதிதை (4) உபேட்சை என நான்காம்.

மைத்திரி:— பணமுள்ளவனிடத்திலாவது, குணத்தினுற் சமானமானவனிடத்திலாவது, ஈசுவரபக்தனிடத்திலாவது, விஷயகர்மி உபாசகர்களிடத்திலாவது இவர்கள் என்னுடையவர்களென்றுண்டாகும் புத்தி.

கருணை:—துக்கமுடையவன், குணத்தினுல் தாழ்ந்தோன், அஞ்ஞானி, ஜிஞ்ஞாசு, என்னுமிவர்களிடத்திலுள்ள இரக்கம்.

முதிதை:— புண்ணியவான், குணத்தினுல் மேம்பட்டவன், ஈஸ்வரன், முத்தன் என்னுமிவர்களிடத்திலுள்ள பிரியம்.

உபேட்சை:— பாவி, அவகுணன், துவேஷன், பாமரன் என்னுமிவர்களிடத்தில் இராகத்துவேஷமில்லாமையாகிய உதாசீனத்தன்மை.

272. வினு:— மோட்சம் அடைய எளிதான வழியாது?

விடை:— ஆருதாரப் பூசை:—

(1) பிராணுயாமம் செய்து மோட்சத்தை அடைவது.

(உ-ம்)மலையைக்கெல்லி எலிபிடிப்பது போல.

(2) தத்துவ விசாரணை, சமாதியோகம் செய்து மோட்சத்தை அடைவது.

(உ-ம்) மண்ணைக்கெல்லி எலிபிடிப்பது போல இதனுள் இரண்டாவதே எளிதான வழியாகும்.

273. வினு:— வித்தியானந்தம் என்றுல் என்ன?

விடை:— துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியம், பிராப்திப்பிராப்பியம் என நான்கு வகைத்தாம்.

274. வினு:— விவிதிஷா சந்நியாசமாவது யாது?

விடை:— ஞான பூமிகளுள் சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னும் மூன்று பூமிகளையுடையராய் வேதிதும்,(154-ம் பக்கம் முடிவு)

அறியத்தக்கதையறிய வேண்டுமென்னும் ஞான இச்சையாற் செய்து கொள்ளும் சந்நியாசம் விவிதிஷா சந்நியாசமாம். இதனை ஜிஞ்ஞாசு சந்நியாச மென்றும் கூறுவர்.

இச் சந்நியாசம், மேற்சனனத்தைத்தாத் தக்க சகலகன்மங்களையும் மனதினால் விடுவதாகிய மானசரூபமாகவும், மந்திரோச்சாரண பூர்வகமாகிய தண்டகமண்டலாதி தாரண ஆச்சிரமரூபமாகவுமிருக்கும். இவ்விரண்டில் முந்திய மானச சந்நியாசத்தில் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரோடு, ஸ்திரீகளுக்குமதிகாரமுண்டு. இதற்கு மைத்திரெயி முதலிய ஸ்திரீகள் ஞானமடைந்திருக்கிறார்களென்கிற சுருதியே பிரமாணமாகும்.

பிரமசாரி, கிரகஸ்தர், வானப்பிரஸ்தர்கட்குப் பிரசித்தமானவாகிய சந்நியாசஞ் செய்து கொள்வதில் யாதானுமோர் நிமித்தத்தாற் பிரதிபந்தமிருந்தால் அவர்கள் தன்னாச்சிரம தருமங்களைவிடாமல் ஞானசாதனமான மானச சந்நியாசஞ்செய்து கொள்ளுவதற்கு அதற்கு அதிகாரமுண்டு. விரோதமில்லை யென அறிக.

275. வினு:— ஸ்திரீகளுக்கு மானச சந்நியாசமேயன்றிப் பிரேக்ஷ, மந்திரோச்சாரண பூர்வகமாயுள்ள தண்டகமண்டலாதி தாரண ஆச்சிரமரூபமாகிய சந்நியாசமில்லையோவெனின்.

விடை:— மைத்திரேயைப் போல் விவாகம் பண்ணிக்கொண்டு நாயகனிடத்திராநின்ற ஸ்திரீகளுக்கு மானச சந்நியாசமாத்திரமுண்டு. விவாக மில்லாத கன்னிகைகளுக்கும், நாயகனிழந்த விதந்துக்களுக்கும், சுருதிகளில் பிக்ஷுகியென்னும் வாக்கியமிருத்தலால் மந்திரோச்சாரண பூர்வகதண்டக மண்டலாதி தாரண ஆச்சிரமரூபமாகிய விவிதிஷா சந்நியாச முண்டென அறிக.

276. வினு:— ஸ்திரீகளுக்கு ஆச்சிரமரூபமாகிய சந்நியாச முண்டென எங்கே சொல்லியிருக்கிறது?

விடை:— மோக்ஷதருமமென்னுங் கிரந்தத்தில் நாலாவது டீகா சனகர் சம்வாதத்தில் திரிதண்டாதிதாரண ஆச்சிரமிகளாய் ஈடணைத்திரயத்தியாகம், பிக்ஷான்ன போசனம், வேதாந்த சிரவணம், ஏகாந்தத்திருந்து, பிரஹ்மத்தியானஞ்

செய்தலாகிய சந்நியாசம் சுலபமாக ஸ்திரீகளுக்கு உண்டெனச் சொல்லியிருக்கிறது. இங்ஙனமே சாரீர பாஷியத்தினுஞ் சொல்லியிருக்கிறதெனப் பிரமாணமாக எடுத்து வித்தியாரண்ணிய சுவாமிகள். சீவன் முக்தி விவேக மென்னுங் கிரந்தத்தில் விவிதிஷா சந்நியாசஞ் சொல்லுமிடத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்கள். இஃதன்றிப் போதாயனர் ஸ்திரீகளுக்கும் சந்நியாசங் கூறியிருக்கிறாரெனவும், அதை விஞ்ஞானேசுரர் ஒப்பியும் வருகிறாரெனவும், வைத்தியநாததீக்ஷிதீயம் வருணாச்சிரம காண்டத்திற் சொல்லியிருக்கிறது. மனுதர்ம சாஸ்திரம் எட்டாவது அத்தியாயம் ஸ்திரீசங்கரகணத்தில் சந்நியாசம் பண்ணிக் கொண்ட ஸ்திரீகளுண்டெனவும் கூறுகிறது. ஆதலின் மானச சந்நியாசம் சகலமான ஸ்திரீகளுக்கும் உண்டெனவும், ஆச்சிரம ரூபமாகிய சந்நியாசம் கன்னிகை, விதந்துக்களுக்கு மாத்திரம் உண்டெனவுங் கொள்ளற்பாலதென அறிக.

277. வினு:— வித்துவ சந்நியாசமாவது யாது?

விடை:— சிரவண, மனன, நிதித்தியாசன வலியால் பிரமத்தைத் தன் சொருபமாக அறிந்துள்ள ஞானுநந்தம், வாசனுக்ஷய, மனோநாச, தத்துவஞானங்களின் அப்பியாசவாயிலாக சீவன்முத்திச்சுகத்தை யபேக்ஷித்துச் செய்து கொள்வதாகிய பரமாம்ச சந்நியாசமே வித்துவசந்நியாசமாகும். இதனை ஞானவான் சந்நியாசமெனவுங் கூறுவரென அறிக.

278. வினு:— சீவன்முத்தர்களுக்கு ஆகாமிய சஞ்சிதகன்மங்கள் நீங்கினும், பிராரப்த கன்மங்கள் நீங்காதிருக்கின்றமையால் மேலுஞ் சன்மத்தில் உதிப்பித்தற்குக் காரணமாகாதோ வெனின்.

விடை:— வறுபட்டவித்து, தீனிக்கு மாத்திரம் உபயோகமாகுமே யன்றி அங்குரத்தை யுதிப்பித்தற்குக் காரணமாகாதது போல, சீவன்முத்தர்பாலிராநின்ற பிராரப்தகன்மமும், ஞானுக்கினியாற் றகிக்கப்பட்டுப் போயினமையால் போக அனுபவத்திற்குமாத்திரம் காரணமாகுமேயன்றி மேலுஞ்சன்மத்தை யுதிப்பித்தற்குக் காரணமாகாதென அறிக.

279. வி௲:—சீவன் முத்தர்கள் பிராரப்த க்ஷயத்தில் அடையத்தக்கது யாதெனின்?

விடை:— சரீரோபாதிகள் விடுபட்டு, அதீதானந்தமய பிரஹ்ம சொரூபமாகி அகம், புறம், பெயர், சாதி, குறிகளின்றி பொருள் எப்படியோ அப்படியிருப்பதாகிய விதேக முத்தியென அறிக.

280. வி௲:— ஞானிக்கும், அஞ்ஞானிக்கும் ஆத்மாவும், மனமும் எவ்வாறிருக்கும்?

விடை:— ஞானிக்கு ஆத்மா அகண்டாகாரமாயிருக்கும், மனம் அணுப்பிரமாணமாயிருக்கும். அஞ்ஞானிக்கு மனம் அகண்டாகாரமாயிருக்கும். ஆத்மா அணுப்பிரமாணமாயிருக்கும்.

281. வி௲:— ஆகாயத்தைப் பார்க்கிலும் வியாபகமானதெது?

விடை:—சித்தானவள் ஆகாயத்தைப் பார்க்கிலும் வியாபகமானவள்.

282. வி௲:— பரமாணுவிலும் நுட்பமானதெது?

விடை:— பரமாணுவிலும் நுட்பமானவள் சித்து.

283. வினு:— அவள் வடிவம் யாது?

விடை:— ஸ்புரிக்கின்றதே அவள் வடிவம்.

284. வினு:— எங்கிருக்கின்றனள் அவள்?

விடை:— தன் சொரூபத்திலிருக்கின்றனள்.

285. வினு:— ஒருத்தியே பரவினவளாக வும், நுட்பமானவளாகவும் எவ்விதம் ஆவள்? ஸ்புரிக்கின்றதென்றால் என்ன? ஆத்மா யாது?

விடை:— காரணத்தன்மை பற்றிப் பரவினவள். கிரகிக்கக் கூடாமையால் நுட்பமானவள். ஸ்புரிக்கின்றது உணர்வான ஆத்மாவன்றி வேறில்லை.

286. வினு:—அவிவேகமென்பது என்ன? தானென்றது (ஆத்மாவென்றது) யாராகும்? செய்கையில் அபிமானமென்பது யாது?

விடை:— ஒன்றை மற்றொன்றாகக் கருதுவதே அவிவேகம். தன்னை (ஆத்மாவை) யறியத் தன்னைக் கேள். வாசனையே அபிமானம்.

287. வினு:—அவிவேகம் எதுபற்றியறாம்? அதற்கும் எது காரணம்? இக்காரணத்திற்கும் எதுகாரணம்?

விடை:— விசாரத்தினால் அவிவேகம் நசிக்கின்றது. வைராக்கியம் விசாரத்திற்குக் காரணமாகும். இதற்குக்காரணம் தோஷதிருஷ்டியே.

288. வினா:— விசாரமென்பது யாது? வைராக்கியம் என்பது எது? தோஷதிருஷ்டி என்றால் என்ன?

விடை:— திருக்கையும், திருசியத்தையும் சோதித்துப்பார்ப்பதே விசாரம். திருசியம் வேண்டாமையே வைராக்கியம். திருசியத்தில் துக்க புத்தியுண்டாவதுதான் தோஷதிருஷ்டி.

289. வினா— இவையெல்லாம எதனால் உண்டாகும்? இதனையும் எவ்விதம் அடையலாகும்? இதனிடத்தும் நிதானம் யாது?

விடை-— தேவதானுக்கிரகத்தினால் இவை யாவுமுண்டாகும். இதுவும் பக்தியினால் அடையப்படுகின்றது. இந்த பக்திக்கும், சாது சங்கம் ஒன்றே நிதானமாகும்.

290. வினா:— தேவதை யென்று சொல்லப்பட்டவர் யாவர்? பக்தி யென்று கூறியது யாது? சத்துக்கள் எவ்வித மிருப்பவர்கள்?

விடை:— ஜகத்தை நடத்துபவளே தேவதை. தத்பரதையே பக்தி யெனப்படும். சாந்தராகவும், தயையுடையவராகவு மிருப்பவரே சத்துக்கள்.

291. வினா:— உலகத்தில் எந்த நேரமும் பயப்படுகின்றவன் யார்? எந்நேரமும் துக்கப்படுகிறவன் யாவன்? எப்பொழுதும் எளியோனாக யிருப்பவன் யாவன்?

விடை:— மகாதனவான் எந்நேரமும் பயப்படுகிறவன். வெகு குடும்பமுடையவன் துக்கிதனாவன். ஆசை பிடித்தவன் எப்போதும் எளியனாக இருப்பான்.

292. வினா:— உலகத்தில் பயமில்லான் எவன்? யார் துக்கமில்லாதிருப்போன்? எப்போதும் எளியோனல்லாதிருப்பவன் யாவன்?

விடை;— பற்றில்லாதவனே பயமற்றவன். மனத்தை ஜயித்தவனே துக்க மற்றோன். அறியவேண்டியதை யறிந்தவனே எளியனல்லாதிருப்பவன்.

293. வினா:— உலகத்தில் எவனைக் குறிப்பிட்டறிவது அரிது? தேகமில்லாதவனாகக் காணப்படுகின்றான் யாவன்? செய்கை செய்யாமையாகும்?

விடை:— ஜீவன் முத்தன் குறிப்பிடத்தகாதவனாவன். அவன் தேகவானாக விருந்தாலும் விதேகன். அவனுடைய செய்கை செய்யாமை யெனப்படும்.

294. வினா:— உலகத்தில் எது இருக்கின்றது? எது இல்லை? எது மிகவும் கூடாதது?

விடை:— திருக்கு இருக்கின்றது. திருசியம் இல்லை. விவகாரம் கூடாதது.



உ

# ஞானி அஞ்ஞானியின் தன்மை.

ஞானிக்கு அபயம். அஞ்ஞானிக்குப் பயம். பிரஹ்மமே நானென்றிருப்பவருக்கு நிர்ப்பயமும், நிச்சலமுமுண்டாகுவதும், தேகாதிகளை நானென்றெண்ணுகிறவனுக்குப் பயமும், சஞ்சலமும், கெடுதியும் இன்னும் ஜனனமரணாதி அனந்த துன்பமும் வருவதும், முறையே பூமியில் படுத்திருக்கிறவனுக்கு நிர்ப்பயமும், நிச்சல முதலான தோடவற்றுடன் கூடிச் சுகமும், வருவதும், அரசமரத்து நுனிக்கொப்பில் படுத்திருக்கிறவனுக்குப் பயம். சஞ்சல முதலான அனந்த துக்கம் வருவதும் போலவென அறிக.

ஞானி மனது பிரபஞ்ச வியாபாரத்திற் சேராது. அஞ்ஞானி மனது அதில் சேரும். அவை தாமரையிலைத் தண்ணீர் போலும், சாம்பற்கட்டியில் ஜலம்படுவது போலுமென அறிக. ஞானியும், அஞ்ஞானியும் விஷயத்தில் கர்மத்தால் விழுந்தாலும், அதில் ஞானி சம்பந்தப்படான். அஞ்ஞானி சம்மந்தப்படுவன். இதற்கு எடுத்துக்காட்டாகச் சேற்றில் பிள்ளைப் பூச்சியும், எருமைமாடும் விழுந்திருந்தாலும், வெளியில் வரும்போது பிள்ளைப் பூச்சி அதில் சம்பந்தப்

படாமலும், எருமை சம்பந்தப்பட்டும் வருவதை யும் தண்ணீரில் கிடந்த தாமரையிலையையும், வைக்கோல் கட்டையும், அதிலிருந்து வெளியி லெடுக்கும்போது, தண்ணீரில் தாமரையிலை சம் பந்தப்படாமலும், வைக்கோல் கட்டு அதில் சம் பந்தப்பட்டு எட்டு ஆள் சுமையாவதையுங் கண்டு கொள்க. ஞானி, அஞ்ஞானிகளின் சகவாசத்தின் தன்மை எவ்வாறெனில் மகாகாமியாயிருந்தாலும் குருவின் சமீபத்திலிருந்தால் விரக்தனவன். மகா விரக்தனயிருந்தாலும் காமிகள் கூட்டத்தில் சேர்ந்தால் காமியாகிவிடுவன். எது போலு மெனின் வாணிபனுடைய எண்ணெய்ச் சிக்குப் பிடித்த வஸ்திரத்தை வண்ணானிடத்திற் கொடுத் தால் அதுவும் வெள்ளையாய்ப் போவது போலும் வெள்ளை வஸ்திரத்தைச் சுயம்பாகியினிடத்தில் கொடுத்தால் அது கரித்துணியாகப் போவது போலும், மிகுந்த ஈரவிறகு ஆனாலும் வெய்யிலில் போட்டால் காய்ந்து போவது போலும் காய்ந்த விறகானாலும், கடலிற் போட்டால் ஈரமாய் போவது போலுமென அறிக.

அஞ்ஞானி விஷயம் அகப்பட்டால் எப்படியிருப்பானெனில் மாப்பிள்ளை மாமியார் வீட்டில் மருவுக்காக அழைக்கப்படும்போது உற்சாகமாயிருப்பது போலும், பச்சைப் புல்லகப்பட்ட பசு உற்சாகமாயிருப்பது போலும் உற்சாகமாயிருப்பானென அறிக. விவேகிக்கு விஷயங்கிட்டினால், விலங்குபோட்டு ஜெயிலுக்குக் கொண்டுபோகப்படுவன் போலும், காட்டில் போகும் போது திருடன்கையிலகப்பட்டவன் போலும், சங்கடப்படுவனென்றறிக. பிரஹ்மசுகத்தைப் புசிக்கிற ஞானிக்கு உள்ளிலும், வெளியிலும் ஆனந்தமுண்டாகும். விஷய சுகத்தைப் புசிக்கிற அஞ்ஞானிக்கு உள்ளிலும் வெளியிலும் துக்கமுண்டாகும். அது எதுபோலவெனின் பாற்கடலில் முழுகினவனுக்கும் உப்புக்கடலில் முழுகினவனுக்கும் உள்ளிலும், வெளியிலும், சுகமும், துக்கமும் காணப்படுவது போலுமென அறிக. அஞ்ஞானி சங்கற்பம் முடியாது. ஞானி சங்கற்பம் முடியும். எது போலவெனின், ஏழை நினைத்தது முடியாமற் போகிறதும், ராஜா நினைத்தது முடிகிறது போலுமென்க.

ஆமையானது தனக்கு விலக்ஷணனான மனிதனைக் கண்டால் தன் குஞ்சுகளுக்காக விரித்திருந்த தன் அவயவங்களை அடக்கிக்கொள்வது போல ஞானியாகிற ஆமையும் முமுக்ஷுக்களாகிற தன் குஞ்சுகளிருக்கும் போது தத்வ விசாரமாகிற தன் அவயவங்களை விரித்துக் காண்பித்துக் கொண்டு, தனக்கு விலக்ஷண அஞ்ஞானிகளாகிற மனுஷர்களைக் கண்டமாத்திரத்தில் ஒன்று மறியாத மூடன் போலத் தன் விசாரமாகிற அவயவங்களை அடக்கிப் போடுவன். மூடனை ஆமையாக வைத்துக் கூறுகிறார். ஞானியில்லாத விடத்தில் அஞ்ஞானி தன் அகம்பாவத்தால் சாஸ்திரங்களை விரிப்பன். ஞானியைக் கண்டமாத்திரத்தில் தன் கடையைக் கட்டிப் போடுவனென்றறிக. ஐயா! பிரஹ்ம விசாரம் பண்ணினால் பாவமென்று சிலர் சொல்லுகிறார்களேயென்றால், அப்பா! அது பிராஹ்மணனைக்கொன்று அந்த மாமிசத்தைச் சாப்பிடுகிறவன், கத்தரிக்காய் சாப்பிடுகிறவனைப் பார்த்து இப்படி நீ அநியாயம் செய்யலாமா? பிரமஹத்திதோஷம் உன்னைவிடாதே யென்று சொல்லுவது எங்ஙனம் பொருந்தாதோ அது

போல,யதார்த்தமான பிரஹ்மம் தானாயிருப்பதை மறந்தது மல்லாமல், தேகாத்ம புத்தியுடன் கூடினவன் ஞானிக்கும் ஞானாப்பியாசத்துக்கும் குற்றஞ் சொல்வது பொருந்தாதென அறிக.



உ

ஓம் தத் சத்.

# சீடன் நன்முயற்சி.

---

## நிஷ்டானுபூதி.

---

ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தால் அடங்
கிடாப் பொறி புலனடங்கும்
ஆதனத்திருந்தே சாதனை புரிந்தால் அடங்
கிடும் மனோவிடயங்கள்
ஆதனத்திருந்தே சாதனை புரிந்தால் அறி
வறியாமை யொழியும்
ஆதனத்திருந்தே சாதனை புரிந்தால்
அகண்ட வீடடைவது நிசமே.

ஒன்றினு மாசையின்றி யிந்திரியங்கள் தம் வழியொழிகிடாதொருக்கி, நன்றியினேடு தீங்கினை யொத்து நல்வினை தீவினை துறந்து, பொன்றினும் நோவுற்றழுதல் செய்யாதே பூரித்தல் வாடுத லின்றி, யென்றுமுன்னிழந்த பொருட்கிரங்காதே வரும் பொருட்கிச்சை செய்யாதே.

---

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடி லொருவன்
    றன்னுநற் றவமெலாஞ் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப் போம்என்
    றறிஞர்க ளுரைத்திடல் சிறிதும்
போற்றிலே னுன்னைப் போற்றிலேன் சுவையிற்
    பொருந்திய காரசா ரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலேயாசை தங்கினே
    னென்செய்வே னெந் தாய்.

குரு கிருபையால் தத்துவஞானத்தை எவ னொருவன் பெற்றாலும், அதை அஞ்ஞானுதிகளிடத்திற் பறிகொடாமல் சாக்ஷரத்காரம் வரை கெட்டிப் படுத்துவது தான் சீடன் நன்முயற்சி.

(உபமானம்) தெய்வகதியாய் மழைபெய்து பிரவாகம் வந்தாலும், அதை வீணாய்விட்டு விடாமல் அணைபோட்டு ஏரியில் கொண்டு வந்து கட்டிக் கொள்வது போலும்.

சீதனம் கொடுத்த சொத்தைக் கள்வர் கையில் பறிகொடாமல் வீடு கொண்டு வந்து சேர்த்து ரக்ஷிக்கிறவன் போலு மறிக.

ஒரு முமுட்சுவானவனுக்குச் சாக்ஷாத் காரமாகப் பிரஹ்மம் நானென்ற ஞானம் உதயமா காமற் போனாலும், குரு சாதுக்களுடைய வாக்கியங்களை நம்பி, நான் பிரஹ்மமென்றும் தேகாதி ஜெகத்துப்பொய் யென்றும், திடமாய் அநுசந் தித்து வருகிறவனுக்குத் திடசாக்ஷாத் கார ஞானவாயிலாய் முத்தி வரும்.

மருந்தினுடைய மகிமை நோயாளிக்குத் தெரியாமற் போனாலும், வைத்தியனுடைய வார்த்தையை விசுவசித்துச் சாப்பிட்டவனுக்கு நோய்தீர்ந்து சுகம் உண்டாவது போலும். காசிக்கு வழிதெரியாதிருந்தாலும், புகைவண்டிக் காரனைநம்பி அவ்வண்டியிலேறிப் போகிறவனுக்கு கங்காஸ்நானம் சித்திப்பது போலுமென அறிக.

இந்த ஜென்மத்திலேயே பிரஹ்ம ஞானத்தை அடையப் போகிற புருஷன் எப்படி இருப்பானென்றால் இந்த உலகத்தில் தனக்கு ஒருவனுடைய சிநேகமும் வேண்டாமென்பவன். அவர்களுக்கு கொடுக்கவேண்டிய கடன் ரூபாய்களைப் பெண்சாதி தாலிவரையிலும் விற்றுக் கடனைத் தீர்த்து விடுகிறவன் போலும். ஜீவேஸ்வர ஜகத்துக்களிலிருக்கிற ஆசையாகிற கடனை அடியோடே தீர்த்துக்கொள்வதே அடையாளம் என்றறிக. இடைவிடாமல் நிதித்தியாசனம் செய்து வந்தால் ஞான உதயம் தானே யாகும், அரணிக் கட்டையைக் கடைந்து வருகிறவனுக்குத் தீ தானே உண்டாவது போலும், தயிரைக்கடையக் கடைய வெண்ணெய் வெளியாவதுபோலும், எள்ளை ஆட்ட ஆட்ட எண்ணெய் வெளியாவது போலுமென அறிக.

குரு சந்நிதானத்தில் சிரவணம் ஷட்விதலிங்கதாற்பரியத்தோடே ஏகாக்கிரமாய்ச் செய்ய வேண்டும். குரு சந்நிதியிற் போன இவனைப் பார்த்து நீ தேகாதிகளல்ல, ஜகம் சத்தியமன்று, நீயே பிரஹ்மமென்று அவர் சொன்னதும் இவனதைச் சிரவணம் பண்ணினாலும், அபக்குவனாயின்

பிரஹ்ம அப்பியாசத்தால் வாசனுக்ஷயங்களை இவன் செய்தே முக்தனுக வேண்டும்.

காசிக்கு நடந்து போகிறவன், காசிவாசியான துணைப் பிராமணனைப் பிடித்துக் கொண்டு, கேட்டு, அவன் காண்பிக்கும் அந்த மார்க்கங்களை இன்னபடியென்று தெரிந்து கொண்டாலும் இவன் அவ்வழிச்சென்றே காசியைச் சேர வேண்டியது போலு மென அறிக.



உ

ஓம் தத் சத்.

## உத்தம மத்திம அதம அதிகாரிகளின் தன்மை.



குரு சந்நிதியில் வந்திருக்கிற உத்தம, மத்திம, அதமர்களாயுள்ள அதிகாரிகளுடைய பக்குவமாவது:—

குரு கோபித்த மாத்திரத்தில் தூர ஓடிப் போகிறவன் அதமன். கோபித்தவுடன் கொஞ்சம் விலகி மறைந்திருந்து பின்னுல் வந்து சேரு

கிறவன் மத்திமன். கோபித்த காலத்தில் இப்படி நமக்கு யார் புத்தி சொல்லப்போகிறாரென்று மகிழ்ச்சியுடன் இடைவிடாமல் பணிவிடைகளையும், சிரவணாதிகளையும் செய்கிறவன் உத்தமன்.

(உ-ம்) களத்தில் குவித்திருக்கும்போது மணி நெல்லும், அரைக்காய் நெல்லும், பதரும் சேர்ந்திருப்பதாலும், காற்றடித்துத் தூற்றின மாத்திரத்தில் பதர் தூரத்தில் ஓடிப்போவதும், அரைக்காய் நெல் மண்ணுக்குள் மறைந்திருந்து பின்னால் புடைத்தபின் காணப்படுவதும், பழுத்த நெல் எந்தக் காற்றுக்கும் அசையாமல் பிரகாசமாய் விளங்குவது போலும்.

யுத்தத்தில், அர்த்தரதன் ஓரடிபட்ட மாத்திரத்தில் ஓடிப்போவான். அது போலிருக்கிற அதமன் மோக்ஷ வெற்றியை ஒருக்காலும் அடையான். சமரதன் அடிபட்ட காலத்தில் சமாளித்து மறைந்து பின் தோன்றி வெற்றி கொள்ளுகிறவன் போல மத்திமன் சிலகாலத்தில் மோக்ஷ வெற்றி பெறுவான். மகாரதன் எவ்வளவு சத்துருக்களுடைய பாணம் வந்து விழுந்தாலும் லக்ஷியஞ் செய்யாது (பொருட்படுத்தாது) தன்னை

யும், தன்னைச் சார்ந்த சேனைகளையும் காப்பாற்றி எதிரிகளையும், அவர்களைச் சார்ந்த படைகளையும், நிமிஷத்தில் அதம் பண்ணுவதுபோல் உத்தம அதிகாரி. அஞ்ஞானியையும் அவனைச் சார்ந்த காமக்குரோதாதிகளையும் பொய்யென்று அதம் பண்ணித் தன்னையும் தன்னைச் சார்ந்த மைத்திரி, கருணை, முதிதை, சமதமாதிகுணங்களையும் காப்பாற்றிக் கொண்டு க்ஷணத்தில் மோக்ஷமாகிற வெற்றியை யடைவனென் றறிக.

முமுக்ஷுவானவன் குருசந்நிதிக்கு வரும்போதே சாதனசதுஷ்டய முதலான சகல சற்குணங்களுடனே கூடி வருகிறவன் உத்தமன்.

சாதன சதுஷ்டயத்தினுடைய ஹேது, சொரூபம் வரையிலுள்ள குணங்களை யுடையவனாய் வந்தும் குறையுள்ள குணங்களை யுடையவனாய் வந்து பின் குரு சந்நிதான விசேஷத்தால் பூரண குணங்களைப் பெறுகிறவன் மத்திமன்.

நித்தியா நித்திய வஸ்துவிவேக மாத்திரமுடையவனாய் வருகிறவன் அதமன். அதற்குக் கீழ்ப்பட்டவன் அதிகாரியில் சேர்த்தல் கூடாது.

நித்தியமநித்திய மென்ற பொருள்கள் சகல ஜீவரிடத்தும் இருக்கும். குருவிடம் வந்த வனுக்கு, மேல் சாதனம் வரும். மற்றவர்க்கு இல்லை.

பிராரப்தாதீனமாய்க் குருவினிடத்தில் எவ்வளவு கெட்ட நடத்தையிருந்தாலும் உத்தம சீடனுக்குத் தோஷந் தோற்றாது. அது மணலில் போட்ட சர்க்கரையை எடுக்கிற எறும்பு போன்றதும். ஜலத்தில் விடப்பட்ட பாலை மட்டும் பிரித்துக் கிரகிக்கிற அம்சம் போன்றதுமென வறிக. குருவினிடத்திலிருக்கிற நல்ல நடத்தைகளை மட்டும் சிஷ்யன் கிரகிக்க வேண்டுமே தவிரப் பிராரப்த கர்மத்தால் அவரிடத்தில் கெட்ட நடத்தையிருந்தால் அதைப் பார்த்தலோ அல்லது செய்தலோ கூடாது. ராஜனிடத்திலிருக்கிற நல்ல நடத்தைகளைமட்டும் ஜனங்கள் செய்ய வேண்டுமே தவிர, அவனிடத்திலிருக்கிற கெட்ட நடத்தைகளைச் செய்தால் உத்தியோகமும் போய்த் தண்டனையும் அடைவது போலுமென அறிக.

முக்கியமாயுள்ள சிஷ்யன், குருவாலே எவ்வளவு கண்டிக்கப்பட்டாலும், அவ்வளவு கண்டிப்

பும்,நயமென்று அறிந்து கொள்வான். அவரையும் விட்டு விலகான்; வஸ்திரத்தைத் துவைக்கத் துவைக்க அழுக்குப்போய் வெண்மையடைவது போலும்; தாபத்திரயத் துக்கத்தால் தவித்துக் கொண்டிருக்கிற முமுக்ஷுகளுக்குச் சற்குரு தெரிசனம் கிடைத்தால் எவ்விதம் தோன்றுமெனில், முடவனுக்குக் கொம்புத்தேன் அகப்பட்டது போலும், பிறவிக் குருடனுக்குக் கண் தெரிந்தது போலும். நடக்கமாட்டாதவனுக்கு ரயில் வண்டி அகப்பட்டது போலும் சந்தோஷப் படுவனென்றறிக.

குருவினிடத்தில் சீடர்கள் எப்படி இருக்க வேண்டுமென்றால் பட்டாளத்திலிருக்கிற தலைமை உத்யோகஸ்தர் ஜாடை செய்தால் சிப்பாய்கள் செய்வது போலுமென.



உ

ஓம் தத் சத்

# மகா வாக்கிய உபதேச குருக்கள் பரம்பரை.



தத்துவா தத்துவ விசாரம்பண்ணி, அதத்துவத்தைத் தள்ளித் தத்துவத்தைத் தானாகக் கண்டு சந்தேக விபரீதமற இருக்கவேண்டும்.

ஓ. சாதுக்களே! சரீரத்தைப் புண்ணுக நினைக்க வேண்டும். புருடர்கள் சரீரந்தன்னில் ஓர் புண் உண்டானுல் அதை அசங்கிதமென்று எண்ணி, அதைத் தக்க உபாயத்தினுல் துரிதமாக நிவர்த்திப்பது போல, ஆத்மாவுக்கு உண்டாகிய ரணரூபமாகும் சரீரங்களிடத்தில் புத்திமான்கள் அசங்கிதப்பட்டும், அதன் அழிவு காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட அசூசையாகிய சரீரங்களை நவரத்தின ஆபரணங்களினுலும், திவ்வியமாகிய சந்தனுதி வாசனைத்திரவியங்களாலும் அலங்கரித்து அதன் மூலமாக ஆனந்தத்தை அடைபவர்கள், புண்ணை அலங்கரித்து ஆனந்திப்பவர் போலாவார்கள். ஆத்மா, பரமாத்மாக்களில் சற்றும் பேதமில்லை. பரமாத்மா ஒன்றே வேதப் பிரமாணமாய் இருப்பதன்றி, ஆத்மா, பரமாத்மா இவைகளைப் பேதப்படுத்தினவன் ரௌரவாதி நரகத்தை அடைவானென்று வியாசர் விஷ்ணு புராணத்திலும், வியாசர் தந்தைக்குப் பாட்டனுன வசிஷ்டர் ஞானவாசிட்டத்திலும், வால்மீகர் அத்யாத்மீக இராமாயணத்திலும், மகாவிஷ்ணு

(பகவான்) பகவத்கீதை, உத்ரகீதையிலும், பலராமர் ராமகீதையிலும், உருத்திரன் சிவகீதையிலும், பிரம்மா பிரஹ்ம கீதையிலும், திருவாய் மலர்ந்தருளியிருப்பதன்றி; சுகப்பிரம ரிஷிக்கு நாரதரும், சனக சனந்தனுதிகளுக்கு சாம்புவரும், பரத்துவாசருக்கு வால்மீகரும், ராமருக்கு வசிஷ்டரும், சுக்கிராச்சாரியாருக்கு பிருகுரிஷியும், பிரகலாதன், அர்ச்சுனன், உத்தாலகர் முதலானோர்க்கு பகவானும், சுவேதகேதுவுக்கு உத்தாலகரும், இந்திரனுக்குப் பிரகஸ்பதியும், விதுரனுக்கு, மைத்திரீயரும், தருமருக்குத் துர்வாசரும் மாபலிக்குச் சுக்கிராச்சாரியரும், அனுமானுக்குச் சீதையும், அகஸ்தியருக்குச் சுப்பிரமணியரும், புசுண்டருக்கு அம்பிகையும், சதாநந்தருக்குக் கௌதமரும், பகீரதனுக்குத் திரிசூலரும், தேவிக்குக் கபிலரும், போதித்திருக்கின்றார்கள்.

பிரஹ்மானந்தத்தை விரும்பினவன் முன்னம் சகுணமாகிய திரிமூர்த்திகளையாவது நிர்க்குணமாகியப் பரப்பிரஹ்மத்தை யாவது அன்பாய் உபாசிக்க வேண்டும். இதனுல் அக்னியில் விழுந்த சருகைப்போல சகல ஆகாமியப் பாவங்களும் பஸ்பமாகிப் புண்ணியம் மேலிடும். இப்

புண்ணிய மேலீட்டால், அநித்தியமாகிய சம்சாரம் துன்பமாய்த் தோன்றுவதன்றி, நித்தியமான மோட்ச மார்க்கத்தைக் காட்டும் சற்குரு தரிசனம் கிடைக்கும்.

அந்தச் சற்குருநாதனுக்கு அன்புடன் பணிவிடை செய்தால் பெருங் காற்றால் சிதறிப் போகும் மேகத்தைப்போல, சஞ்சித கர்மங்கள் எல்லாம் சிதறுண்டு போகும். இதனால் அதிகச் சந்தோஷ முண்டாகும். பின்பு ஆசாரியார் உபதேசிக்கும் மகாவாக்கியத்தை ஏகாந்த ஸ்தானத்திலிருந்து, சிசுக்களின் உச்சியைப் போலவும், தைலதாரையைப் போலவும் தியானிக்க வேண்டும். பிரஹ்மமே இஷ்ட தெய்வமென்றும், அத்தெய்வமே சற்குருவென்றும், குருசேவையே சகல கிரியைகளென்றும், குரு உபதேசமே வேதமென்றும், வேதமுடிவே வேதாந்தமென்றும், வேதாந்த சிரவணமே மோட்சமார்க்கமென்றும், மோட்ச இச்சையே தபோபல மென்றும், தபோபலமே மனன மென்றும், மனனமே நிதித்தியாசன மென்றும், நிதித்தியாசனமே சமாதி நிஷ்டையென்றும், சமாதி நிஷ்டையே சாக்ஷாத்கார மென்றும், சாக்ஷாத்காரமே பிரஹ்ம மென்றும், பிரஹ்மமே ஆநந்தமென்றும், ஆநந்தமே முக்தியென்றும் நிச்சயமாம்.

பரமாச்சாரியார் மீதும், இஷ்ட தேவதையின் மீதும், சிரவணார்த்தங்கள் மீதும் சிரத்தை பூரணமாய் இருக்க வேண்டும். பரமாச்சாரியார் மீது இருக்கும் சிரத்தையானது, பரமஞானத்தை கொடுக்கும். இஷ்டதேவதை மீது இருக்கும் சிரத்தை பாபவிமோசனமாக்கும். சிரவணத்தில் சிரத்தையில்லாதவனுக்கு ஞானம் லபிக்காது. ருதுவாகாத கன்னிகைக்கு எப்படி கர்ப்பம் தரிக்க மாட்டாதோ அப்படியே சிரத்தை இல்லாதவனுக்கு ஞானார்த்தம் மனதில் தரிக்காது, சிரத்தையே ருது; உபதேசமே விந்து, ஞானமே கர்ப்பம், ஆனந்தமே சிசு என்று உரைக்கத்தகும். குருகிருபை இல்லா விட்டால் சிரவணாதிகள் பலிக்கமாட்டாது. தன்னையறிகிற பரியந்தம் மேற்சொன்ன மூன்றினிடத்தும் சிரத்தை பூரணமாயிருப்பவனுக்கு பிரஹ்மானந்தம் உதயமாகும். எப்போது ஆசாரியருடைய பரிபூரண கிருபை பெறுவானோ அப்போது ஞானப்பிரகாசம் உதயமாகும். தன்னை ஜீவபாவனையாகக் காண்பதுவே பிறவி. தன்னைச் சிவரூபமாகக் காண்கிறதே மோட்சம்.

---

ஓம் தத் சத்.

# ஞானியின் பெருமை.

---

வெட்டினார் மௌனிதானும் விந்துபாம்பை
வேதாந்த மென்ற அர்த்தவாளினாலே
தட்டினார் மாயைதனைத் தள்ளிக்கீழே
சச்சிதானந்த வெள்ளச் சார்பினாலே
ஓட்டினார் ஓட்டினார் நிர்க்குணமே யான
உத்தமனே அதுவல்லோ ஞானவீதி
தெட்டினார் தெட்டினார் சகலமெல்லாம்
ஜெகஜால வித்தையென்று தெளிந்திட்டாரே.

## எண் சீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்

இச்சையற்றோர்க் கின்பமில்லை துன்ப மில்லை
இருவினையோ டிரவுமில்லை பகலு மில்லை
குச்சிதனக் கிரைதேடித் திரிவ தில்லை
குறைவுமில்லை நிறைவுமில்லை குலமோ இல்லை
சட்சமய வாதமில்லை பேத மில்லை
சங்கற்ப விகற்பமில்லை தானே தானா
யச்சமறச் சுகித்திருக்கும் சிசுவைப் போல
ஆனந்த விளையாட்டா யிருப்பார் தாமே.

ஆவியுடல் பொருள் மூன்றுந் தத்த மென்றே
அருட்குருவின் சன்னிதியிற் சித்தமாக
மேவியளித் தறிந்துண்மைப் பொருளைப்பற்றி
மெய்த்தவத்தின் மிக்கோராய் நிற்கு நல்லோர்
பாவையரோடில்லறத்தில் வாழ்ந்திட்டாலும்
பரிவினொடுந் துறவறத்தோடிருந் திட்டாலும்
பூவுலகில் ஒட்டியும் ஒட்டாமல் வேறாய்ப்
புளியோடு பழம்போல் ஒத் திருப்பர் தாமே

ஞானிக்கும், கர்மாநுசாரமாக மேன்மேல் வருகிற சுகதுக்கங்களால், சித்தம் உடையாதோ வென்றால், சித்தமாகிய கண்மாய்க்குச் சொப்பனம் போலும், இந்திரஜாலம் போலும், பொய் யென்று, விவேகமாகிற மடை திறந்திருப்பதால் துக்கமாகிற ஜலம் எவ்வளவு வந்தாலும், சித்த மாகின்ற ஏரி உடையாதென்றறிக.

மனக்காற்றால் உலகமாகிய கப்பல் அங்கு மிங்குமாய் அலைகின்றது. அதனால் ஞானிக்கு ஒன்றும் வருத்த மில்லை. விஷயாசைகளாகிய யானைகள் ஞானியாகிய சிங்கத்தைக் கண்டு "வீர்" என்று சப்தமிட்டு ஓடுகின்றன. ஓடமுடியா விட்டால் கெஞ்சிப்பணிகின்றன.

விஷயாசைகளாகிய எலிகள் ஞானியாகிய பூனையைக் கண்டு "கீச்" "பூச்" என்று ஓடுகின்றன.

விஷயாசைகளாகிய முட்களை ஞானமாகிய முள்வாங்கியால் எடுத்து எறிய வேண்டும்.

சுக அமைதியிலமர்ந்திருக்கும் ஞானிக்குப் பந்தம், மோட்சம் ஏது! பாவ புண்ணியம் ஏது; சிரவணம் மனனம் ஏது; யோகம் தியானம் ஏது; ஒன்று மில்லை என்பதாயிற்று.

ஆருட ஞானியானவன் தான் பிரஹ்மம் என்பதை ஒரு நிமிஷம் கூட மறவான். எவ்வாறெனில் சூரியன் பிரகாசத்தையும், நீர் குளிர்ச்சியையும், தீ உஷ்ணத்தையும் விட்டுப் பிரியாதிருப்பது போலுமறிக.

உலகத்திலுள்ள அஞ்ஞானிகள்; முழுமையும் சத்திய மென்று நம்பியிருக்கிற ஜீவேஸ்வர ஜகத்தை, ஞானி ஒருவனே பொய்யென்றறிந்து துணிந்திருக்கிறானென்றறிக. ஜீவன் முத்திச் சுகம், வைராக்கியத்துடன் கூடிய விவேகிக்கே அதிகமாய்வரும்.

(உ-ம்) வெஞ்சனங்களுடன் (காய்கறிகளுடன்) கூடிய அன்னம் சுகம் கொடுப்பது போல்.

ஞானிக்கு அகங்காரம் நசித்துப் போனதால் அதைப்பற்றியிருந்த புண்ணிய பாவமும் நசித்துப் போகும்.

(உ-ம்) பக்ஷியிறந்தபிறகு அதன் பக்ஷங்கள் ஜீவித்திராதது போல்.

ஞானியின் சரீரத்தைக் கர்மம் எந்த ஊரில் கொண்டு போய்ச் சேர்க்கிறதோ அது அவ்விடத்திலுள்ள ஜனங்களின் அதிர்ஷ்டம்.

(உ-ம்) காற்றானது மேகத்தை எவ்விடத்தில் தள்ளுகின்றதோ அது அவ்விடத்திலுள்ள ஜனங்களுடைய அதிர்ஷ்டம் போல்.

ஞானி கர்மிகளுடைய கூட்டத்திலிருக்கும் போது கர்மிபோல இருப்பான். முமுட்சுக்களுடைய கூட்டத்திலிருக்கும் போது கர்மக்கட்டுகளைத்துறந்து ஞானோபதேசத்தை இஷ்டப்படி செய்வன். ஞானிகள் அகர்த்தாவென்ற தேரிலேறிச் சகலலோகத்திலும் சஞ்சரிக்கிறார்கள்.

(உ-ம்) சூரியன் ஒரு சக்கரம் போட்ட தேரி லேறி உலகமெல்லாம் சஞ்சரிப்பது போல வறிக.

திட ஞான முள்ளவனைப் பிரார்த்தித்தால் சுகதுக்கமான எவ்வளவு விஷயங்கள் வந்தாலும் அவைகள் யாவும் அவனை அசைக்கா.

(உ-ம்) நதியில் வேரூன்றியிருக்கிற பாறையை, எவ்வளவு வெள்ளம் வந்தாலும் அசைக்க மாட்டாதது போலறிக.



உ

ஓம் தத் சத்.

## ஆன்ம புராணக் கருத்துக்கள்
## ஞானிகளுடைய செயல்.

---

ஞானிகள் ஆசாரம் உடையோராயும், அநுசாரம் உடையோராயும் இருப்பார்கள். கல்வி கற்றவர்கள் போல் பேசுவார்கள் கல்விகற்காத மூடரைப் போலவும் இருப்பார்கள். வெற்றி கொண்டவர்கள் போல் பேசுவார்கள். ஊமை போல் மௌனமாயிருப்பார்கள். பக்தனைப்போல்

அழுவார்கள். சிசுவைப்போல் சிரிப்பார்கள். உன்மத்தரைப்போலும், பித்தரைப் போலும், பிசாசுபோலும், திரிவார்கள் எதற்கென்றால், தங்கள் சிஷ்யரைப் பரீட்சிக்கும் பொருட்டும், உலக மக்கள் தங்களைப்பற்றாத படிக்கும் திரிவார்கள். உண்மையில் மேற்சொல்லியவற்றில் அவர்களிடத்தில் ஒன்றுமில்லை. நான் அசங்கன் சின்மாத்திரன், நான் சாட்சி யென்ற நிச்சயத்தோடு சஞ்சரிப்பார்கள்.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி.



உ

ஓம் தத் சத்.

# சங்கரர் வாக்கியம்.



மகனே! நீ இந்த அகரத்துட்டானே(ஊரிலே) பயிக்கம் (பிச்சையெடுத்தல்) செய்திருந்தால் சின்னஞ்சிறுவனைக் கண்டாயினும் ஆசைதீர்வேன். அது

கேட்ட சங்கரர், தாயே! சந்நியாசம் பெற்றவன் ஓரிடம் பற்றி நின்றால் அவனுக்கு, எனது என்னும் பெருங்கேட்டுக்கு இட முண்டாம். அதுவுமன்றித் தான் பிறந்த ஊரின்கண்ணே யிருத்தல் வெறுத்தவனுக்கு ஒருபோதும் ஆகாது. நான் தீர்த்த யாத்திரைக்குச் செல்வேன். இல்லறம் பூண்பதன்றிச் சந்நியாசம் பெறுவது என்ன முறை யென்று வினவியதற்குச் சங்கரர், எப்போது வெறுப்புத்தோன்றுமோ அப்போதே சந்நியாசம் பெறவேண்டும்.

ஆரியன் சங்கரமுனிவரை நோக்கி நீ யார் என வினவினர். அதற்கு இவர் ஐயரே! யான் மண், நீர், கால், வெளியல்லேன், அவற்றின் குணமல்லேன், பொறியல்லேன், எல்லா விலக்கணமுமுடையதாய்க் காட்சியை யெல்லா மொழித்து நின்ற சச்சிதானந்த வடிவாகிய, சுத்த அறிவாகிய நான் சிவோகம் என்றனர்.

வேதாந்த சாஸ்திர சங்கிரகம் முற்றுப்பெற்றது.

---

# விவேக சட்கம்.

---

அனித்திய பூதத் தேகநா னன்று
விந்தியத் தரங்கநா னன்று
நனித்தவாங் கார பிராணவர்க் கங்க
ளன்றுநற் புந்தியு மன்று
தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குத்
தூரமாஞ் சாட்சிநா னென்றுந்
தனித்துநித்தியமாய்ப் பிரத்தியகான்மாவாந்
தற்பதப் பொருளதாஞ் சிவோகம். (1)

உற்பவன் விருத்த னன்றுநா னோர்கா
லத்தினும் நசிப்பவ னன்று
அற்பமாந் தேக காரியமான
அவையெலா மகங்கரத் தல்லால்
தற்பத வடிவாஞ் சின்மயமான
எனக்கிலை சகளநிஷ் களமா
யெப்புறத்தேனு மெல்லையற் றிருக்கும்
இன்பசிற் சொரூபமாஞ் சிவோகம். (2)

சத்திய ஞான னந்தமாம் பிரமத்
துதித்திடு மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகஞ் சேதனத் திடையே
நசிக்கும தேதென விளம்பிற்
றத்து சொப்பனமுஞ் சுழுத்தியி லசத்தாந்
தன்மைபோற் சத்திலா திருக்குஞ்
சுத்தபூரணமாய் நித்திய மாகித்
துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். (3)

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்போற்
பரப்பிர மத்திடை யதனிற்
சுழிதரு மஞ்ஞா னத்தினாற் சீவ
னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனாற் சர்ப்பமோக மும்போய்ப்
பழுதையாய்க் கண்டது போல
வழுவில்தே சிகனார் சீவனீ யன்றென்
றறைந்திட வாகினேன் சிவோகம். (4)

எமக்குமன் னியமா முலகமொன் றில்லை
யெவ்வுல கங்களெம் மிடத்திற்
சமித்துவுற் பவமா மாதலான் மாயை
வடிவம தேதெனிற் சாற்ற
வமைத்தகண் ணாடிவிம்பமா நிழல்போல்
அடங்கியெம் மிடத்தினில் விளங்குந்
தமத்துவ மில்லாச் சச்சிதா னந்த
தற்பத விமலமாஞ் சிவோகம். (5)

சாக்கிர மதனி லிந்திரியங்கள்
தமக்குமேற் சாட்சியாஞ் சிவோகம்
தேக்குசொப் பனத்தி லுலகரூ பமதாய்ச்
செய்மனச் சாட்சியாஞ் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி
யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம்
நீக்கமில் துரியா னந்தமாஞ் சர்வ
நிர்மல சாட்சியாஞ் சிவோகம்.

விவேக சட்கம் முற்றிற்று.

---

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 18 | குறைவரச் | குறைவறச் |
| ,, | 21 | (சேர்க்கவேண்டியது) | |
| | | அத்வைதபாவனுரூபம் | |
| 7 | 6 | முமுட்சுகளாகிய | முமுட்சுக்களாகிய |
| 8 | 12 | பிரம | பிரதம |
| 11 | 3 | ஆயுள் | ஆயுர் |
| 12 | 8 | மிக்கூறக் | மிகக்கூறக் |
| 17 | 22 | கைல்யம் | கைவல்லியம் |
| 20 | 16 | படித்து | படித்துச் |
| 24 | 2 | அகண்டனுக்கித் | அகண்டனுக்கிப் |
| 27 | 8 | விளக்குகினறது | விளக்குகின்றது |
| 39 | 1 | சத் | தத் |
| 42 | 9 | பிரித்தரிதல் | பிரித்தறிதல் |
| ,, | 18 | எதுவேர | எதுவோ |
| 50 | 3 | வருத்த்ம் | வருத்தம் |
| 51 | 15 | இச்ச்ாதனங்கள் | இச்சாதனங்கள் |
| 53 | 1 | சும்பந்தம் | சம்பந்தம் |
| 54 | 5 | சல்பந்தம் | சம்பந்தம் |
| ,, | ,, | செய்கிறவள் | செய்கிறவன் |
| ,, | 11 | அதிாரி | அதிகாரி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 54 | 20 | அவ்வேகத்தும் | அவ்வேகத்துவம் |
| 56 | 21 | பொருன் | பொருள் |
| 57 | 2 | நாடரமல் | நாடாமல் |
| ,, | 19 | பொருளாதிகளைத | பொருளாதிகளைக் |
| ,, | 21 | கொண்டிருய்பது | கொண்டிருப்பது |
| 64 | 2 | இாண்டு | இரண்டு |
| ,, | 12 | தர்மத்திள் | தர்மத்தின் |
| ,, | 14 | பலத்திற்ரு | பலத்திற்கு |
| 65 | 3 | எல்லாவித்தினுலும் | எல்லாவிதத்தினுலும் |
| 66 | 4 | யரது? | யாது? |
| ,, | 7 | லக்ஷிபத்தைத் | லக்ஷியத்தைத் |
| ,, | 11 | பானத்தைப் | பாணத்தைப் |
| ,, | 18 | அந்தரங் | அந்தரங்க |
| 67 | 2 | சம்பாதித்தற்கு | சம்பாதிப்பதற்கு |
| ,, | 6 | வெளிப்படுத்து வற்காக | வெளிப்படுத்து வதற்காக |
| ,, | 11 | சம்பாதித்தற்கு | சம்பாதிப்பதற்கு |
| 68 | 8 | இலிங்கம | இலிங்கம் |
| 70 | 8 | பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றதர | பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றதா |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 70 | 12 | பிரஹ்மமங்ளின் | பிரஹ்மங்களின் |
| 73 | 2 | யோகம | யோகம் |
| 75 | 13 | ஸ்பரீச தீட்சை | ஸ்பரிச தீட்சை |
| ,, | 18 | என்ருல | என்ருல் |
| 78 | 7 | உண்டரகிறது | உண்டாகிறது |
| 80 | 5 | சொ்ருபம் | சொரூபம் |
| ,, | 20 | பிரவ்ஷம | பிரஹ்ம |
| 81 | 16 | உண்டவது | உண்டாவது |
| ,, | 19 | ஸ்ரீமான்கள்களது | ஸ்ரீமான்களது |
| 84 | 3 | இத்த | இந்த |
| 87 | 10 | வசத்தனுப் | வசத்தனுய் |
| 90 | 3 | பிரரகபாவம் | பிராகபாவம் |
| ,, | 5 | அத்யந்தபபாவம் | அத்யந்தாபாவம் |
| ,, | 6 | விடுபட்டு | விடுபட்டுச் |
| 91 | 13 | "விலக்கணமுடையது" | இலக்கண முடையது |
| 93 | 7 | சொருபமுடையது | சொரூபமுடையது |
| 94 | 17 | தூயடவுடம்பு | தூயவுடம்பு |
| 96 | 5 | பெருதிருத்தலும் | பெருதிருத்தலும் |
| 98 | 5 | உதரரணம் | உதாரணம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 98 | 12 | பேரல | போல |
| 100 | 17 | பிரகாபாவம் | பிராகபாவம் |
| 101 | 13 | திரோபம் | திரோபவம் |
| ,, | 18 | ஷி | ஷி |
| 110 | 15 | பராமார்த்திக | பாரமார்த்திக |
| 111 | 1 | தத்துவஞான மின்றி | தத்துவஞானமின் றிப் |
| ,, | 19 | வியகாரத்திற்குத் | வியவகாரத்திற்குத் |
| 112 | 2 | ஆக அவஸ்தை மூன்றுதுரியம் | ஆக மூன்று. அவ ஸ்தை துரியம். |
| ,, | 9 | ஈசுவரள் | ஈசுவரன் |
| 117 | 6 | அஜாத வாதியாம் | அஜாத வாதமாம் |
| 121 | 19 | உற்பத்தில்லாத | உற்பத்தியில்லாத |
| 124 | தலைப்பு | | மகாவாக்கியம். |
| 125 | 15 | இரணியகர்ப்பன் | இரணியகர்ப்பம் |
| ,, | 21 | பத்துவாச்சியம் | பத்தும் வாச்சியம். |
| 127 | 16 | சடாகாசங் | கடாகாசம் |
| 132 | 9 | விசாரணே | விசாரணே |
| ,, | 13 | மித்தியாத்வ | மித்தியாத்வம் |
| 133 | 21 | ஜந்து | ஐந்து |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 135 | 4 | கடாகாசங்களிள் | கடாகாசங்களின் |
| 136 | 2 | கண்டநத்தின் | கண்டனத்தின் |
| 137 | 21 | நிங்கும் | நீங்கும் |
| 138 | 4 | சர்வமயமாயும் | சாவயவமாயும் |
| 141 | 10 | சத்தாநநுவித்தம் | சத்தாநுவித்தம் |
| ,, | 11 | சத்தாநுவித்தம் | சத்தாநநுவித்தம் |
| 145 | 8 | பிரார்த்தித்தபடி | பிராரத்தப்படி |
| 149 | 16 | ஞரனத்தால் | ஞானத்தால் |
| 150 | 7 | அகங்காரத்தை | அந்தகாரத்தை |
| 151 | 2 | அதீனம் | ஆதீனம் |
| ,, | 5 | ஷி | ஷி |
| 156 | 12 | பின்னர்க் | பின்னர் |
| 160 | 9 | வெளிப்படுவர் களாயும் | வெளிப்படுபவர் களாயும் |
| 163 | 7 | அது பூமிகாத்தி ரப்பியாச | அது மூன்று பூமி காத்திரப்பியாச |
| ,, | 12 | க்ஷீரோதிகம் | க்ஷீரோதகம் |
| 168 | 12 | மைத்திரெயி | மைத்திரேயி |
| 169 | 5 | மைத்திரேயைப் | மைத்திரேயியைப் |
| 176 | 11 | திரூக்கு | திருக்கு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 177 | 17 | அஞ்ஞரனியும் | அஞ்ஞானியும் |
| 182 | 17 | சாக்ஷரத்காரம் | சாக்ஷாத்காரம் |
| 195 | 12 | பொய்யென்று | ஜகம் பொய்யென்று |
| 198 | 3 | பிரார்த்தித்தால் | பிராரத்தத்தால் |
| ,, | 15 | வெற்றி | வெறி |
| 202 | 3 | சுழிதரு | கழிதரு |
| ,, | 14 | விளங்குந் | விளங்குந் |

பிழை திருத்தம் முற்றிற்று.

(1) புஸ்தகம் கிடைக்குமிடம்:—

சாது நித்தியானந்தம்மாள்,

P. சுப்புலாபுரம்,

வன்னிவேலம்பட்டி P.O.

(Via) திருமங்கலம்,

மதுரை ஜில்லா.




---



(2) ஸ்ரீமதி

சி. உண்ணாமலைத்தாயம்மாள்,

தலைவர்,

சச்சிதானந்த ஸபை,

தூத்துக்குடி. (S. Ry.)

---

